*கழக வெளியீடு: ௭௭௭*

# மகேந்திர வர்மன்



ஆசிரியர்:

**மயிலை, சீனி. வேங்கடசாமி அவர்கள்**

**திருநெல்வேலித் தென்னிந்திய**
**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,**
*திருநெல்வேலி.* :: *சென்னை-1.*

First Edition: March, 1955.

# MAHENDRA VARMAN



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

24, EAST CAR STREET, THIRUNELVELI.

Appar Achakam, Madras-1—I Ed. C. 1[illegible]00.

# பதிப்புரை

நம் தமிழகத்தில் முடியுடை வேந்தர்கள் மூவர் ஆட்சி முடிந்தபின், பிற்காலத்தே ஆண்ட வேற்று மொழி வேந்தர்கள் பலராவர். அவருள், பல்லவ மன்னர்களென்பவர் நாட்டைக் கைக்கொண்டு அரசாண்டனர். அம்மன்னர் வழியில் வந்தோன், மகேந்திரவர்மனெனப் பெயரிய வேந்தனுவன்.

இம்மன்னனால் நம் நாட்டில் கலையும் இசையும பெருகிவளரலாயின. இவன் காலத்தே சிற்பக்கலை செழித்தோங்கிச் சிறந்திருந்தது. இவ்வரசன் வரலாற்றைப் பழங்கால இலக்கியங்கள், கல்வெட்டு, கோயில்கள், சிற்பங்கள், ஓவியங்கள்
கொண்டு தம் நுண்ணிய பேரறிவால் மயிலை, சீனி. வேங்கடசாமி அவர்கள் எழுதி உதவியுள்ளனர்.

இதன்கண் வரலாற்றுச் சான்றுடன் கூடிய லோவியப் படங்களும், சிற்ப உருவப்படஙகளும இன்றியமையாத இடங்களில் விளக்கத்துக்காக இணைத்து நன் முறையில் நூலுருவாக்கி 'மகேந்திர வர்மன்' என்னும் பெயர்சூட்டி வெளியிட்டுள்ளோம்.

தமிழ் அன்பர்கள் வாங்கிக் கற்றுப் பழங்கால உண்மை வரலாறு கண்டுணர்ந்து இன்புறுவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## உரிமை விளக்கம்

இந்நூலில் உள்ள படங்களில், முகப்புப் படங்கள் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12-ம், 117, 118, 119, 122-ஆம் பக்கங்களில் உள்ள படங்களும் இந்திய அரசாங்க ஆர்க்கியாலஜி இலாகாவுக்கு உரிமையானவை. மற்றப் படங்கள் ஏ. ஹெச். லாங்ஹர்ஸ்ட் அவர்கள் எழுதிய 'பல்லவர் சிற்பங்கள்' என்னும் நூலிலிருந்தும், ழுவோ-துப்ராய் அவர்கள் எழுதிய 'பல்லவர் பழமைகள்,' 'திராவிடச் சிற்பம்' என்னும் நூல்களிலிருந்தும் எடுக்கப்பட்டவை என்பதை நன்றியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

மயிலை, சீனி. வேங்கடசாமி

# முன்னுரை

ஒவ்வொரு நாட்டுக்கும் அந்தந்த நாட்டின் வரலாறு மிகவும் முதன்மையாகும். ஆனால், வரலாற்று நூல்களை எழுதும் வழக்கம் நமது நாட்டிலே பண்டைக் காலத்தில் இருந்ததில்லை. ஆகவே, நமது நாட்டுப் பழைய வரலாறுகள் நமக்குக் கிடைக்கவில்லை. முஸ்லீம்களும் ஐரோப்பியரும் வரலாற்று நூல் எழுதும் வழக்கமுடையவரா யிருந்தனர். ஐரோப்பியர் நமது நாட்டிற்கு வந்த பின்னரே, வரலாறு எழுதும் வழக்கம் நமக்கு ஏற்பட்டது.

அண்மைக்காலத்திலே மேல்நாடுகளில் ஆர்க்கியாலஜி, எபிகிராபி[1] சாத்திரங்களின் மூலமாக வரலாற்று ஆராய்ச்சி முறை பெரிதும் வளர்ச்சியடைந்திருக்கிறது. இந்த [illegible] மூலமாகப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் [illegible]பான எகிப்தியர், பாபிலோனியர், யவனர் [illegible]ரகர்), உரோமர் முதலான பழங்கால மக்களின் வரலாறுகளும் நாகரிகங்களும் இப்போது கண்டறியப் பட்டுள்ளன.

நமது நாட்டிலிருந்த ஆங்கிலேய ஆட்சியினர், ஆர்க்கியாலஜி, எபிகிராபி இலாகாக்களை நமதுநாட்டிலும் ஏற்படுத்தி அவற்றின்மூலமாக மறைந்துபோன பழஞ் செய்திகளையும் நாகரிகங்களையும் வரலாறுகளையும் கண்டறிய வழிசெய்தனர். இதனால் மொகஞ்சதாரோ, ஹரப்பா, நாகார்ச்சுனகொண்ட, நாலந்தா, பாடலிபுரம்

1. Archaeology, Epigraphy.

(இராசக்கிருகம்) முதலிய பல அழிந்து மறைந்துபோன நகரங்களின் நாகரிகங்களும் வரலாறுகளும் கண்டறியப்பட்டன. அசோகச் சக்கரவர்த்தியின் பிராமி எழுத்துச் சாசனங்களும், ஏனைய அரசர்களின் கல்வெட்டெழுத்துக்களும்,செப்பேட்டுச் சாசனங்களும் கண்டறியப்பட்டு, அவற்றின் உதவியினாலே இந்திய நாட்டின் பழைய கலை, நாகரிகம் வரலாறு முதலிய செய்திகளை அறிய முடிந்தது.

நந்தமிழ் நாட்டிலேயும், பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே மறந்து மறைந்துபோன சேர சோழ பாண்டியர் முதலிய அரசர்களின் வரலாறுகளும், நாகரிகங்களும், செய்திகளும், ஆர்க்கியாலஜி எபிகிராபி ஆராய்ச்சியின் பயனாக, இப்போது நாம் அறிந்துகொள்ள இடமேற்பட்டிருக்கிறது. இதில் சிறப்பான செய்தி என்னவென்றால், முழுவதும் மறைந்துகிடந்த பல்லவ அரசர்களைப்பற்றிய வரலாறுகளும், செய்திகளும் இப்போது மீண்டும் நமக்குக் கிடைத்திருப்பதுதான்.

ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு முன்பு, பல்லவ அரசர்களின் வரலாறுகளும் செய்திகளும் நமக்கு ஒன்றுமே தெரியாதிருந்தது. இப்போது, அவர்களைப் பற்றிய பல செய்திகளையும் வரலாறுகளையும் நாம் அறிந்துகொள்ள, ஆர்க்கியாலஜி எபிகிராபி ஆராய்ச்சி பெரிதும் உதவிசெய்திருக்கிறது. ஏறத்தாழ கி. பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரையில் பல்லவ அரச பரம்பரையினர் தொண்டமண்டலத்தையும் சோழமண்டலத்தையும் அரசாண்டு வந்தனர். அவர்களுள் பேரும் புகழும் படைத்து விளங்கியவர் சிலர். இச் சிலரில் முதன்மையானவன் மகேந்திரவர்மன் ஆவன். இவ் வரசனைப்பற்றிய வரலாறும் இவன் காலத்து வரலாறும்

9ல் கூறப்பட

மகேந்திரவர்மன் வாழ்ந்த காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இவன் காலத்திலே தமிழ் நாட்டிலே சமண சமயமும் பௌத்த மதமும் பரவிச் சிறப்புப் பெற்றிருந்தன. சைவ வைணவ மதங்கள் குன்றி மங்கிக்கிடந்தன. ஆனால், பத்திநெறி தோன்றியிருந்தது. இவ்வரசன் காலத்திலேதான் அப்பர் சுவாமிகள் எனப் படும் திருநாவுக்கரசு சுவாமிகள் வாழ்ந்திருந்தார். சமண சமயத்தவனாக இருந்த மகேந்திரவர்மனை இவர் சைவ சமயத்தில் சேர்த்தார். அன்றியும் பத்திநெறியையும் சைவ சமயத்தையும் வளர்த்து நாடெங்கும் பரவச் செய்தார்.

மகேந்திரவர்மன் பேரும் புகழும் படைத்த அரசனாக மட்டும் வாழவில்லை; சிற்பம் ஓவியம் காவியம் இசை முதலிய நற்கலைகளை நன்கு கற்ற கலைச்செல்வனாகவும் விளங்கினான். கலைச்செல்வனாக விளங்கியதல்லாமல் கலை வள்ளலாகவும் வாழ்ந்தான். இவன் அளித்த கலைச்செல்வங்கள் இப்போதும் தமிழ்நாட்டில் நின்று நிலவுகின்றன.

இவ்வளவு சிறப்புவாய்ந்த இவ் வரசனைப்பற்றியும் இவன் காலத்து நிகழ்ச்சிகளைப்பற்றியும் இவன் அமைத்த குகைக்கோயில் முதலிய கலைகளைப் பற்றியும் இந்நூலில் ஆராயப்படுகின்றன. ஆர்க்கியாலஜி எபிகிராபி ஆராய்ச்சி மட்டுமல்லாமல், ஏனைய சிற்பம் ஓவியம் இலக்கியம் முதலியவற்றின் துணைக்கொண்டும் இந்நூல் ஒருவாறு எழுதப்பட்டது.

இந்நூலைப் படிப்போர் செய்யவேண்டிய கடமை யுண்டு. மகேந்திரவர்மன் அமைத்த குகைக்கோயில்களையும் அவற்றில் உள்ள சிற்பங்களையும் கண்டுகளித்து, அக்கலைச் செல்வங்களை அழிவுபடாமல் பார்த்துக்கொள்ள வேண்டிய பொறுப்பும் கடமையும் இதைப் படிப்போர்களைச்

சார்ந்தன. ஏனென்ருல், நம் நாட்டுக் கலைச்செல்வங்கள் நமக்குச் சொந்தமானவை என்பதை நம்மவரில் பெரும் பாலோர் இன்னும் உணரவில்லை. இப் பொறுப்பை உணர்ந்து அவற்றைப் பாதுகாக்கவேண்டியது நம் ஒவ் வொருவருடைய கடமையாகும். இக் கலைச்செல்வங்களைப் பொன்னேபோல் போற்றவேண்டும்.

இந் நூலை நல்லமுறையில் அச்சிட்டு வெளியிட்ட சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும், அக் கழகத்தின் ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர் களுக்கும் எனது நன்றி யுரியதாகும்.

மலரகம்,
மயிலாப்பூர்,
சென்னை-4,
10-3-55

மயிலை. சீனி. வேங்கடசாமி.

# உள்ளுறை

# இந்நூல் எழுத உதவியாய் நின்ற நூல்கள்

| நூல் | | ஆசிரியர் |
|---|---|---|
| கலிங்கத்துப் பரணி | ... | செயங்கொண்டார் |
| கலைமகள் : தொகுதி I | ... | திங்கள் வெளியீடு |
| சிலப்பதிகாரம் | ... | |
| ஷை உரை | ... | அடியார்க்கு நல்லார் |
| சீவக சிந்தாமணி | .. | திருத்தக்க தேவர் |
| தக்கயாகப் பரணி | ... | ஒட்டக்கூத்தர் |
| புக்கரசு தேவர், காதசமாலை | ... | நம்பியாண்டார் நம்பி |
| ரட்டை மணிமாலை | ... | காரைக்கால் அம்மையார் |
| தேவாரம் | ... | திருநாவுக்கரசு சுவாமிகள் |
| | | திருஞான சம்பந்த சுவாமிகள் |
| | | சுந்தரமூர்த்தி சுவாமிகள் |
| நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் | .. | ஆழ்வார்கள் அருளியது |
| பெரியபுராணம் | .. | சேக்கிழார் சுவாமிகள் |
| பம | | மயிலை, சீனி. வேங்கடசாமி |
| மேருமந்தர புராணம் | | அப்பாசாமி சாஸ்திரி பதிப்பு |
| யாழ் நூல் | | உயர்திரு. விபுலாநந்த அடிகள் |
| | | வே. வேங்கடராஜுலு ரெட்டியார் பதிப்பு |

# BIBLIOGRAPHY


Annual Report on Archaeology, Madras 1917—18, 1918—19, 1919—20.

Annual Report of Archaeological Survey of India 1929—30.

Annual Report on Epigraphy, Madras 1893, 1896, 1900, 1905, 1908—9, 1916, 1932—33.

Bulletin of the Oriental Studies, London Institution, Vol. V. (Matta Vilasa. Translated by L. D. Barnett)

Cave Inscriptions at Vallam. P. P. 340—341. South Indian Inscriptions Vol. II.

Conjeevaram Inscription of Mahendravarman I, by G. Jouveau—Dubreuil.

Culavamsa......Translated by Wilhelm Geiger.

Dravidian Architecture by G. Jouveau—Dubreuil.

Epigraphia Indica Vols. III, IV, VI, VII, VIII, X, XII.

History and Culture of the Indian People Vol. III. The classical Age.—Bharatiya Vidya Bhavan.

Indian Antiquary Vol. VIII, LII.

Kasakudi Plates of Nandivarman Pallava Malla. S. I. I. Vol. II.

Kudimiyamalai Inscriptions on Music, Edited by Rao Bahadur P. R. Bhandarkar. PP. 226—237. Epi. Ind. Vol. XII.

Manual of Pudukkottai State Vol. II. Part II.

Mysore Archaeological Report 1909—10.

Origin and Early History of Saivism in South India —C. V. Narayana Ayyar.

Pallava Antiquities Vol. I & II. by G. Jouveau Dubreuil.

Pallava Architecture Part I & II. by A. H. Longhurst.

Pallavas of Kanchi by R. Gopalan.

South Indian Inscriptions Vol. I, II, XII.

Studies in Indian Painting, by Mehta.

Studies in South Indian Jainism, by M. S. Ramaswami Aiyengar.

The Pallavas......by G. Jouveau—Dnbreuil.

The Mattavilasa Prahasana of Mahendra Vikrama Varman —Trivandrum Sanskrit Series No. LV. (1917).

Two Cave Inscriptions at Dalavanur by Prof. E. Hultzsch. PP. 225—226. Epi. Ind. Vol. XII.

Trisashti Salaka Purusha Charitra Vol. I & II.—Helen M Johnson's Translation. (Gaekwad's Oriental Series)

Triveni Vol. III. (1930).

Velurpalaiyam Plates of Vijaya Nandi Varman III. S. I. I. Vol. II. PP. 342—361.

Velvikudi Grant of Nedunjadaiyan. PP. 291—309. Epi. Ind. Vol. XVII.

# ABBREVIATIONS

Epi. Indi.—Epigraphia Indica.

Epi. Rep.—Annual Report on Epigraphy, Madras.

Ind. Ant.—Indian Antiquary

M. P. S.—Manual of Pudukkottai State.

Mys. Arch. Rep.—Mysore Archaeological Report.

S. I. I.—South Indian Inscriptions.

# மகேந்திர வர்மன்



## க. அரசியல்

மகேந்திரவர்மனுடைய தகப்பனாரான சிம்மவிஷ்ணு காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு பல்லவ இராச்சியத்தை அரசாண்டார். சிம்மவிஷ்ணு ஆட்சியை ஏற்றுக் கொண்டபோது, அவருடைய பல்லவ இராச்சியம் ஆந்திர நாட்டையும் தொண்டைமண்டலத்தையும் கொண்டதாக இருந்தது. பிறகு சிம்மவிஷ்ணு சோழநாட்டை வென்று தமது பல்லவ இராச்சியத்துடன் சேர்த்துக்கொண்டார். இச்செய்தி வேலூர்ப் பாளையம், காசாகுடி செப்பேட்டுச் சாசனங்களினாலே தெரிகிறது.

"நெல் வயல்களையும் கமுகஞ் சோலைகளையும் தனக்கு நகைகளாகப் பூண்டு விளங்குகின்ற கவீரனுடைய மகளினால் (காவிரி ஆற்றினால்) பொலிகின்ற சோழர்களின் சோழ நாட்டை அவன் (சிம்மவிஷ்ணு) விரைவில் கைப் பற்றினான்." என்று வேலூர்ப்பாளையச் சாசனத்தின் 10-ஆவது வடமொழிச் செய்யுள் கூறுகிறது.[1]

"பிறகு அவனிசிம்மனாகிய சிம்மவிஷ்ணு அரசாட்சிக்கு வந்தான். அவன் தன் பகைவர்களை ஒழிக்கக் கருதி மலைய களபர மாளவ சோழ பாண்டிய அரசர்களையும், தன் கைவன்மையினால் தருக்கியிருந்த சிங்கள அரசனையும் கேரளனையும் வென்றான்." என்று காசாகுடி செப்பேட்டுச் சாசனம் 20-ஆவது செய்யுளில் கூறுகிறது.[2]

1. S. I. I. Vol II. Page, 501—516.
2. S. I. I. Vol II. Page, 342—361.

இந்தச் சாசனப் பகுதிகளினாலே நாம் தெரிந்து கொள்வது என்னவென்றால், சிம்மவிஷ்ணு சோழநாட்டின் மேல் படையெடுத்தபோது, சோழனுக்குத் துணையாகக் களபர, மாளவ, பாண்டிய, சிங்கள, கேரள அரசர்கள் வந்தார்கள் என்பதும் அவர்களையெல்லாம் சிம்மவிஷ்ணு வென்று சோழநாட்டைக் கைப்பற்றிக்கொண்டான் என்பதும் ஆகும். இவ்வாறு சிம்மவிஷ்ணு காலத்தில் பல்லவ இராச்சியம் வடக்கே கிருஷ்ணாநதி முதல் தெற்கே புதுக் கோட்டை வரையில் பரவியிருந்தது. அஃதாவது ஆந்திர தேசம் தொண்டைமண்டலம் சோழமண்டலம் ஆகிய மூன்று நாடுகளைக் கொண்டிருந்தது.

சிம்மவிஷ்ணுவின் மகனாகிய மகேந்திரவர்மன் இளவரசனாக இருந்தபோது ஆந்திரநாட்டிலே தங்கியிருந்தான். தெலுங்குநாட்டிலே குண்டூர் மாவட்டத்திலே சேஜர்லா என்னும் இடத்தில் உள்ள கபோதேசுவரன் கோவில் சாசனம் ஒன்று, மகேந்திரவர்மன் அக்கோயிலில் திருப் பணி செய்ததைக் கூறுகிறபடியினாலே இளவரசனாக இருந்தபோது இவன் தெலுங்குநாட்டில் இருந்தான் என்பது நன்கு தெரிகிறது.

சிம்மவிஷ்ணு ஏறக்குறைய கி. பி. 600-இல் காலமானான். பிறகு, அவன் மகனான மகேந்திரவர்மன் அரசன் ஆனான். மகேந்திரவர்மன் ஏறக்குறைய கி. பி. 600 முதல் 630 வரையில் அரசாண்டான்.

பல்லவ அரச குடும்பத்தில் மகேந்திரன் என்னும் பெயர் உடையவர்களில் இவன் முதல்வன். ஆகையினாலே சரித்திரத்தில் இவன் மகேந்திரவர்மன் முதலாவன் (மகேந்திரவர்மன் I) என்று கூறப்படுகிறான்.

மகேந்திரவர்மன், தன் தலைநகரான காஞ்சிபுரத்தில் ... அரசாண்டான். மகேந்திரன் காலத்தில் பல்லவ ...டின் வட எல்லை குறைந்துவிட்டது. எப்படி என்றால், வாதாபி (பாதாமி) என்னும் ஊரைத் தலைநகர மாகக்கொண்டு அரசாண்ட சளுக்கிய அரசனாகிய இரண்

டாம் புலிகேசி (இவன் கி. பி. 609 முதல் 642 வரையில் அரசாண்டான்) கி. பி. 610-இல் பல்லவ இராஜ்ஜியத்தின் மேல் படையெடுத்து வந்து ஆந்திர தேசத்தைக் கைப் பற்றிக்கொண்டான். அல்லாமலும் பல்லவரின் தலைநகர மான காஞ்சிபுரத்தின் மேலும் படையெடுத்து வந்தான். ஆனால், மகேந்திரவர்மன் புள்ளலூர் என்னும் இடத்தில் புலிகேசியை எதிர்த்துப் போரிட்டு அவனை முறியடித்துத் ிட்டான்.

காசாகுடி செப்புப் பட்டயம் டைய வெற்றியை இவ்வாறு கூறுகிறது :

" அதன் பிறகு மகேந்திரனுடைய புகழைப் போன்று புகழ்படைத்தவனும் ஆணையைச் செலுத்துபவனும் புள்ள லூரில் தன் பகைவரைப் புறங்கண்டவனுமான மகேந்திர வர்மன் என்னும் அரசன் மண்ணுலகத்தை அர சாண்டான்"[1]

'மகேந்திரன் வென்ற அரசன் யார்?' என்று இந்தப் பட்டயம் கூறவில்லை. ஆனால், இரண்டாம் புலிகேசி யைத்தான் இந்தச் சாசனம் குறிப்பிடுகிறது என்று தெரிகிறது. ஏனென்றால், அய்ஹொளெ சாசனம் புலி கேசியை இவ்வாறு புகழ்கிறது :

'அவன் (புலிகேசி), தன்னுடைய சேனையின் தூசியி தன்னை எதிர்த்த பல்லவ மன்னனுடைய ஆற்றலை மழுங்கச்செய்து அவனைக் காஞ்சிபுரத்தின் மதிலுக்குள் மறையும்படி செய்தான்." (செய்யுள் 29.)

" பல்லவர்களின் சேனையாகிய குளிர்ந்த பனிக்குக் கடுங் கிரணமுள்ள சூரியனைப்போன்ற அவன் (புலிகேசி), சோழ பாண்டிய கேரளர்களுக்குப் பெரும் மகிழ்ச்சியை யுண்டாக்கினான்." (செய்யுள். 31.)[2]

1. S. I. I. Vol II. Page, 342—361.
2. Epi. Ind. Vol VI. Page. 11.

இந்தச் சாசனங்கள் இவ்வாறு கூறுவதிலிருந்து மகேந்திரவர்மனுடன் போர் செய்த சளுக்கிய அரசன் இரண்டாம் புலிகேசி என்பது ஐயமற விளங்குகிறது.

மகேந்திரவர்மன் புலிகேசியுடன் போர் செய்து வெற்றிகொண்ட இடமாகிய புள்ளலூர், செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சிபுரம் தாலுகாவில் காஞ்சிபுரத்திற்கு வடக்கே 15 மைல் தூரத்தில் இருக்கிறது.

சளுக்கிய அரசனை புலிகேசியை மகேந்திரன் முறியடித்துத் துரத்திவிட்ட போதிலும், பல்லவநாட்டின் ஆந்திரப் பகுதி புலிகேசியின் வசமாயிற்று. தான் கைப்பற்றிய ஆந்திரநாட்டில், தன் தம்பியாகிய விஷ்ணுவர்த்தனனைப் புலிகேசி இளவரசனாக்கினான். வெங்கி என்னும் நகரத்தில் இளவரசனாக அமர்ந்த விஷ்ணுவர்த்தனன், பிற்காலத்தில் தனி அரசனாகப் பிரிந்து கீழைச் சளுக்கிய வம்சத்தை உண்டாக்கினான். ஆகவே, பாதாமியைத் தலைநகரமாகக் கொண்டிருந்த மூல சளுக்கிய வம்சம், மேலைச் சளுக்கிய வம்சம் என்று சரித்திரத்தில் பெயர் பெறுவதாயிற்று.

புலிகேசி, பல்லவ இராச்சியத்தின் ஆந்திரப் பகுதியை வென்று கொண்டபடியினாலே, மகேந்திரனுடைய பல்லவ இராச்சியம், வடக்கே வடபெண்ணையாற்றிலிருந்து தெற்கே புதுக்கோட்டைவரையில் தொண்டைமண்டலத்தையும் சோழமண்டலத்தையும் கொண்டதாக இருந்தது. அஃதாவது, நெல்லூர் மாவட்டத்தின் தென்பகுதி (வடபெண்ணைக்குத் தென்பகுதி), சித்தூர், செங்கல்பட்டு, வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், புதுக்கோட்டை, சேலம் ஆகிய மாவட்டங்கள் அடங்கிய இராச்சியமாக இருந்தது.

பல்லவரின் தலைநகரம் காஞ்சிபுரம். மகேந்திரவர்மன் காஞ்சிபுரத்தில் இருந்து அரசாண்டான். பல்லவரின் துறைமுகப்பட்டினம் கடன்மல்லை. கடன்மல்லையிலே மகேந்திரன் மகனான நரசிம்மவர்மன் (முதலாவன்) (இவனுக்கு

மாமல்லன் என்னும் சிறப்புப்பெயர் உண்டு) இளவரசனை

மல்லை அல்லது கடன்மல்லை என்னும் துறைமுகப் பட்டினத்திற்கு மகேந்திரன் காலத்தில் மகாபலிபுரம் என்னும் பெயர் வழங்கவில்லை. மகேந்திரன் மகனான நரசிம்மவர்மன் பல்லவ நாட்டின் மன்னனான பிறகு, தன் சிறப்புப் பெயராகிய மாமல்லன் என்னும் பெயரை மல்லைக்குச் சூட்டி மாமல்லபுரம் என்று வழங்கினான். (மாமல்லபுரம் என்னும் பெயர் பிற்காலத்தில் மகாபலி புரம் என்று மருவி வழங்கலாயிற்று.) ஆகவே, மகேந்திர வர்மன் காலத்தில் மாமல்லபுரம் மல்லை என்றும் கடல் மல்லை என்றும் பெயர்பெற்றிருந்தது.[1]

இவன் தன் பெயரினால் மகேந்திரமங்கலம் என்னும் ஊரை மாமண்டூர்ப்பற்றில் ஏற்படுத்தினான் என்பதைத்

1. பல்லவர் காலத்துக்கு முன்னே கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் 'காஞ்சிபுரத்தைத்' தலைநகரமாகக்கொண்டு தொண்டை நாட்டை அரசாண்ட தொண்டைமான் இளந்திரையன் என்னும் சோழமன்னன் காலத்திலும் கடல்மல்லை, தொண்டைநாட்டின் துறைமுகப்பட்டினமாக இருந்தது. தொண்டைமான் இளந் திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும் பாணாற்றுப்படையில் கடல்மல்லை, நீர்ப்பெயற்று அல்லது நீர்ப் பெயர்த்து என்று கூறப்படுகிறது. (நீர்ப்பெயற்றெல்லை போகி. அடி. 319.) இதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், "நீர்ப் பெயற்றென்னும் ஊரின் எல்லையிலேபோய்" என்று எழுதுகிறார். கடல்மல்லைக்கு நீர்ப்பெயர்த்து (நீர்ப்பெயற்று) என்னும் பெயரும் உண்டுபோலும். நீர்ப்பாயல் என்னும் பெயரும் வழங்கிற்று என்று சிலர் கருதுகின்றனர். நீர்ப்பாயல் என்பது வடமொழியில் ஜலசயனம் என்று கூறப்பட்டது என்பர். எனவே கடல்மல்லை என்னும் தொண்டைநாட்டின் துறைமுகப்பட்டினம் நெடுங்கால மாக இருந்துவந்ததென்பதும் அது மகேந்திரவர்மன் காலத் திலும் பல்லவரின் துறைமுகமாக அமைந்திருந்தது என்பதும் தெரிகின்றன. மகேந்திரவர்மன் காலத்திற்குப் பிறகு அவன் மகன் நரசிம்மவர்மனால் கடல்மல்லை, மாமல்லபுரம் என்று புதுப் பெயர் சூட்டப்பட்டது. நரசிம்மவர்மன் மாமல்லபுரத்தைப் புதிதாக உண்டாக்கினான் என்று சில மேல்நாட்டு ஆசிரியர் கூறுவது சரியன்று.

திருப்பருத்திக் குன்றத்து வர்த்தமானர் கோயில் சாசனத்தினால் அறியலாம்.[1]

மாமண்டூரில் ஓர் ஏரியைச் சித்ரமேகத் தடாகம் என்று தன் பெயரினால் ஏற்படுத்தினான்.

தன் பெயரினால் இன்னொரு ஊராகிய மகேந்திர வாடியை (மகேந்திரபாடி) உண்டாக்கினான். இவ்வூர் வட ஆர்க்காடு மாவட்டம் வாலாஜாபேட்டை தாலுகா சோளிங்கூருக்குத் தென் கிழக்கே மூன்று மைலில் உள்ளது.

மகேந்திரவாடியில் மகேந்திரத் தடாகம் என்னும் ஏரியைத் தன் பெயரினால் உண்டாக்கினான்.

மகேந்திரன் சோழநாட்டிலே தன் பெயரால் மகேந்திரப்பள்ளி என்னும ஊரையமைத்து அதில் தன் பெயரால் மகேந்திரப்பள்ளி என்னும் சிவன்கோயிலை அமைத்தான் என்று தெரிகிறது. மகேந்திரப்பள்ளி என்பது மயேந்திரப் பள்ளி என்று மருவி வழங்கப்படுகிறது. இது கடற்கரையோரமாக உள்ள ஊர். இதற்கு இப்போது கோயிலடிப்பாளையம் என்னும் பெயர் வழங்கப் படுகிறது. திருஞானசம்பந்தர் இந்தக் கோயிலைப் பாடியுள்ளார். அவர் பாடிய ஒரு பாடல் இது :

"நித்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்
மைத்திகழ் கண்டன்நன் மயேந்திரப் பள்ளியுட்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே."

மகேந்திரவர்மன் குகைக்கோயில்களை அமை, செங்கல் கருங்கல் முதலியவைகளைக் கொண்டும் கோயில்களை அமைத்தான். அவ்வாறு அமைத்த கோயில்களில் மயேந்திரப்பள்ளிக் கோயிலும் ஒன்றாக இருக்கலாம். இவன் கட்டுக் கோயிலையும் அமைத்தான் என்பதை துப்ராய் அவர்கள் எழுதிய 'மகேந்திரவர்மனின் காஞ்சிபுரக் கல்வெட்டுக்கள்.'[2] என்னும் சிறுநூலில் காண்க.

1. Epi. Ind. Vol. VII., No 15. P. 115.
2. Conjeevaram Inscriptions of Mahendravaram.

மகேந்திரவர்மன் பல சிறப்புப் பெயர்களைக் கொண்டிருந்தான். மகேந்திரன், மகேந்திரவர்மன், மகேந்திர விக்ரமவர்மன், மகேந்திரப்போத்தரசன், பகாப்பிடுகு, லளிதாங்குரன், குணபரன், மத்தவிலாசன், அவனி பாஜனன், சத்யசந்தன், புருஷோத்தமன், சத்துருமல்லன், சங்கீர்ணஜாதி, சித்ரகாரப்புலி, சேத்தகாரி, விசித்ரசித்தன், அலுப்தகாமன், கலகப்பிரியன், அபிமுகன், மகாமேகன், நரேந்திரன் முதலிய சிறப்புப்பெயர்களை இவன் [illegible] ரன்.

1. மயேந்திரப் போத்தரெசரு
2. ஸ்ரீ மஹேந்த்ர போத்ராதி ராஜன்
3. ஸ்ரீ மஹேந்த்ர விக்ரம

இந்தப் படத்தில் முதலாவது, மகேந்திரவர்மன் காலத்துத் தமிழ் எழுத்து. வல்லம் குகைக் கோயிலில் உள்ளது. 'மயேந்திரப் போத்தரெசரு' என்பது இதன் வாசகம். இரண்டாவது வடமொழி எழுத்து. 'ஸ்ரீமஹேந்த்ர போத்ராதி ராஜன்' என்பது இதன் வாசகம். இது மகாபலிபுரத்து வராகப்பெருமாள் குகைக் கோயிலில் உள்ளது. இது பிராகிருதப் பெயர் என்று தோன்றுகிறது. மூன்று

வது வடமொழி எழுத்து. இது பல்லாவரத்துக் குகைக் கோயிலிலும் திருச்சிராப்பள்ளிக் குகைக்கோயிலிலும், எழுதப்பட்டுள்ளது. 'ஸ்ரீமஹேந்த்ர விக்ரம' என்பது இதன் வாசகம். கீழேயுள்ளது மகேந்திரவர்மன் காலத்துத் தமிழ் எழுத்து; திருச்சிராப்பள்ளி குகைக்கோயிலில் உள்ளது. 'பிணபிணக்கு' என்பது இதன் வாசகம். பிணக்கு என்பது இவன் சிறப்புப் பெயர்களில் ஒன்று.

பிணபிணக்கு

சிவிபுந்து, நில்விலோனையம்பு, வேந்துலவித்து, பசரம்பு, சிலம்பு, மலாயு, கடுந்தரம்பு, நயம்பு முதலிய தெலுங்குப் பெயர்களையும் இவன் கொண்டிருந்தான். இப் பெயர்களை இவன் ஆந்திர நாட்டில் இளவரசனாக இருந்த போது பெற்றுக்கொண்டிருக்க வேண்டும்.

இவன் சிற்பக்கலை இசைக்கலை ஓவியக்கலை காவியக்கலை முதலிய கலைகளில் சிறந்தவன். குகைக் கோயில்களைத் தமிழ்நாட்டில் முதன் முதலாக அமைத்தவன் இவனே. இதனால் இவனுக்குச் **சேதகாரி** என்னும் பெயர் ஏற்பட்டது.

இசைக்கலையின் நுட்பத்தை அறிந்தவனாதலால், இவனுக்குச் **சங்கீர்ணஜாதி** என்னும் பெயர் உண்டாயிற்று. ஓவியக்கலையில் தேர்ந்தவன் ஆனபடியினாலே இவனுக்குச் **சித்திரகாரப்புலி** என்னும் பெயர் உண்டாயிற்று. **மத்த விலாசம்** என்னும் நகைச்சுவை நாடக நூலை இயற்றிய படியினாலே இவனுக்கு **மத்த விலாசன்** என்னும் பெயர் ஏற்பட்டது. இச்செய்திகள் எல்லாம் இந்நூலில் தனித் தனியே விளக்கமாகக் கூறப்படுகின்றன.

# உ. வேறு அரசர்கள்

மகேந்திரவர்மன் காலத்தில் வட இந்தியாவை அரசாண்ட மன்னன் புகழ்பெற்ற ஹர்ஷவர்த்தனன். கன்னோசி நாட்டின் அரசனாகிய ஹர்ஷன் கி. பி. 606 முதல் 647 வரையில் அரசாண்டான். இவன் ஆட்சிக்கு வந்தவுடன் ஆறு ஆண்டு போர் செய்து பதினெட்டு அரசர்களை வென்று அவர்களின் நாடுகளைத் தனது நாட்டுடன் சேர்த்துக்கொண்டான். மேலும், கிழக்கே காமரூப (அஸ்ஸாம்) நாட்டின் அரசனாயிருந்த குமாரன் என்பவனும், வல்லபி (குஜராத்தி) நாட்டின் அரசனாயிருந்த துருவபட்டன் என்பவனும் இவனுக்கு அடங்கிக் கப்பங்கட்டி வந்தனர்.[1] இவ்வாறு வட இந்தியா முழுவதையும் வென்று மகாராசன் என்னும் சிறப்புப்பெயர்பெற்ற ஹர்ஷவர்த்தனன், தக்கிண தேசத்தையும் கைப்பற்ற எண்ணி, சளுக்கிய நாட்டின் மேல் படையெடுத்தான். சளுக்கிய அரசனான புலிகேசி (இரண்டாவன்), நருமதை யாற்றங்கரையில் ஹர்ஷனை எதிர்த்துப் போர்செய்து வெற்றிகொண்டான். இது கி. பி. 620-இல் நடந்தது. தோல்வியுற்ற ஹர்ஷன் அதன் பிறகு நருமதை யாற்றுக்குத் தெற்கே வரவில்லை. ஹர்ஷவர்த்தனனுடைய ஆட்சி, தெற்கே நருமதை யாற்றிலிருந்து வடக்கே இமயமலை வரையில் வட இந்தியா முழுவதையும் கொண்டிருந்தது.

ஹர்ஷவர்த்தனனுடைய இராச்சியத்திற்குத் தெற்கே தக்கண இந்தியாவை அக்காலத்தில் அரசாண்ட மன்னன் **இரண்டாம் புலிகேசி.** இவன் சளுக்கிய மரபைச் சார்ந்தவன் ஆகையால், இவனுடைய நாடு சளுக்கிய நாடு என்று பெயர் பெற்றது. சளுக்கியருக்கு வல்லபர் என்னும் பெயரும் உண்டு. புலிகேசி கி. பி. 608 முதல் 642 வரையில் அரசாண்டான். இவன் அரசாட்சி பெற்றவுடன் நளர், மௌரியர், கடம்பர், கால( கங்கர், ஆலுபர்,

1. Epi. Ind. Vol. X P. 105.



மகேந்திரவர்மன்
காலத்துப்
பரதகண்டம்
70
80
90
30
20
10
சட்லெஜ்
சிந்து
ஹர்ஷ
கங்கை
சாம்பல்
இராச்சியம்
நர்மதை
தபதி
மகாநதி
கோதாவரி
சளுக்கியர்
பல்லவர்
காவிரி
சேரர்
பாண்டி
அரபிக் கடல்
வங்காளக் குடாக்கடல்

லாடர், மாளவர், கூர்ச்சரர் கலிங்கர் முதலிய அரசர்களை வென்று அவர்கள் நாட்டைத் தனது நாட்டுடன் சேர்த்துக் கொண்டு தனது இராச்சியத்தைப் பெரிதாக்கிக் கொண்டான்.

இவன் வென்றவர்களில் நளர் என்பவர் நளவாடி விஷயம் என்னும் நாட்டினர். இது பல்லாரி கர்னூல் மாவட்டங்களில் அடங்கியிருந்தது. மௌரியர் என்பவர், மகத நாட்டை யாண்ட மௌரிய அரசர் வழிவந்தவர் என்று கருதப்படுகின்றனர். இவர் மேற்குக் கடற்கரைப் பக்கத்தில் இருந்ததாகக் கருதப்படுகின்றனர். அகநானூறு என்னும் சங்க நூலில் கூறப்படுகிற வம்பமோரியர் என்பவர் இந்த மௌரியரின் முன்னோராக இருக்கக்கூடும். கடம்பர் என்பவர் மைசூர் நாட்டின் ஒரு பகுதியில் இருந்தவர். கங்கர் என்பவர் கங்கவாடி நாட்டைச் சேர்ந்தவர். லாடர் என்பவர் லாட (குஜராத்தி) நாட்டவர். பிஷ்டபுரம் (பித்தாபுரம்) என்னும் கோட்டையையும் (கோதாவரி மாவட்டத்தில் உள்ளது.) புலிகேசி கைப்பட

பல்லவர்களுக்குரியதாக இருந்த ஆந்திர நாட்டைப் புலிகேசி, மகேந்திரவர்மனுடன் போர் செய்து கைப்பற்றிக் கொண்டான் என்பதை முன்னமே கூறியுள்ளோம். வட இந்தியாவை அரசாண்ட ஹர்ஷவர்த்தனன் சளுக்கிய நாட்டின்மேல் படையெடுத்து வந்தபோது, அவனை எதிர்த்து முறியடித்தவன் இந்தப் புலிகேசியே. இதனால் புலிகேசியின் புகழ் எங்கும் பரவிற்று. பாரசீக நாட்டை அரசாண்ட குஸ்ரு (இரண்டாவன்), புலிகேசியின் புகழைக் கேள்விப்பட்டு, இவனிடம் தூதரை அனுப்பி இவனுடன் நட்புக்கொண்டான்.

புலிகேசியின் சளுக்கிய இராச்சியம் வடக்கே நருமதை யாறுமுதல் தெற்கே வடபெண்ணையாறு வரையிலும், மேற்கே அரபிக்கடல்முதல் கிழக்கே வங்காளக்குடாக்

1. Ind. Anti. Vol VIII P. 237.

# மகேந்திரன் காலத்தில் தமிழ் நாடு



கடல் வரையிலும் பரவியிருந்தது. இந்தச் சளுக்கி இராச்சியத்தின் கிழக்குப் பகுதியைப் புலிகேசி தன் தம்பியாகிய குப்ஜவிஷ்ணுவர்த்தனனுக்குக் கொடுத்தான். குப்ஜ விஷ்ணுவர்த்தனன் கலியாணியைத் தலைநகராக் கொண்டிருந்தான். சளுக்கிய நாட்டின் மேற்குப் பகுதியைப் புலிகேசி அரசாண்டான். இவன் தலைநகரம் வாதாபி என்னும் பாதாமி நகரம்.

இவ்வாறு மகேந்திரவர்மன் காலத்தில் வட இந்தியாவை ஹர்ஷவர்த்தனனும் தக்கண இந்தியாவைப் புலிகேசியும் அரசாண்டனர். புலிகேசியின் சளுக்கிய இராச்சியத்திற்குத் தெற்கே மகேந்திரவர்மனுடைய பல்லவ இராச்சியம் இருந்தது. இந்தப் பல்லவ இராச்சியம், தொண்டை மண்டலம் சோழமண்டலம் என்னும் இரண்டு மண்டலங்களைக்கொண்டிருந்தது. அஃதாவது வடக்கே வடபெண்ணையாறு முதல், தெற்கே புதுக்கோட்டை வரையில் இருந்தது. சோழ அரசர், பல்லவ அரசர்களுக்குக் கீழடங்கிச் சிற்றரசராக இருந்தார்கள். உறையூர், திருவாரூர், பழையாறை முதலிய இடங்களில் சோழ குடும்பத்தவர் பல்லவருக்குக் ...ச் சிற்றரசராக அரசாண்டு வந்தனர்.

பல்லவ இராச்சியத்திற்குத் தெற்கே பாண்டிநாடு ... மகேந்திரவர்மன் காலத்தில் பாண்டிநாட்டை அரசாண்ட பாண்டியன் சேந்தன் என்பவன். இந்தச் சேந்தன், பாண்டியன் மாறவர்மனுடைய மகன்; பாண்டியன் கடுங்கோனுடைய பேரன். இந்தச் சேந்தன் எ... ஆண்டு அரசாண்டான் என்பது தெரியவில்லை. ... பற்றி வேள்விக்குடிச் செப்பேட்டுச் சாசனம் இவ்வாறு ...

"மற்றவர்க்கு மருவினிய ஒரு மகனாகி மண்மகளை மறுக்கடிந்து விக்ரமத்தின் வெளிப்பட்டு விலங்கல்வேல் பொறி வேந்தர் வேந்தன் சிலைத் தடக்கைக் கொலைக் களிற்றுச் செழியன் வானவன் செங்கோற் சேந்தன்."[1]

1. pp. 291-309: Epi. Ind. XVII.

இந்தச் செங்கோற் சேந்தனுடைய மகன், நெடுமாறன் என்பவன். "நிறைக் கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன்" என்று இவனைச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் கூறுகிறார். இந்த நெடுமாறன் முதலில் சமண சமயத்தவனாக இருந்தான். பிறகு திருஞான சம்பந்தரால் சைவ சமயத்தவனாக்கப்பட்டான். திருநாவுக்கரசர் பாண்டிநாட்டில் தல யாத்திரை செய்தபோது அவரை வரவேற்றுப் போற்றியவன் இவனே.

பாண்டி நாட்டிற்கு மேற்கே சேரநாடு இருந்தது. இக் காலத்தில் சேர நாட்டை யரசாண்ட சேர மன்னன் பெயர் தெரியவில்லை.

மகேந்திரவர்மன் காலத்தில் பாரத நாட்டின் அரசியல் நிலை இது. இனி, பாரத நாட்டுடன் சேர்ந்ததும் தமிழ் நாட்டின் அருகில் உள்ளதுமான இலங்கைத் தீவின் அரசியல் நிலை இக் காலத்தில் எப்படி இருந்தது என்பதைப் பார்ப்போம்.

தமிழ்நாட்டின் தென் கிழக்கில் சிங்களத் தீவு என்னும் இலங்கைத் தீவு இருக்கிறது. பண்டைக் காலத்தில் இந்தத் தீவிற்கும் தமிழ் நாட்டிற்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. ஏனென்றால், பௌத்த சமயம் தமிழ் நாட்டில் சிறப்படைந்திருந்தது. காஞ்சிபுரம், நாகைப்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், பூதமங்கலம், போதிமங்கை முதலிய இடங்களில் பௌத்தப் பள்ளிகளும் பௌத்த விகாரைகளும் இருந்தன. ஆகவே பௌத்த நாடாகிய இலங்கையிலிருந்து பௌத்தர்கள் தமிழ் நாட்டிற்கு வருவதும், தமிழ் நாட்டிலிருந்த பௌத்தர்கள் இலங்கைக்குச் செல்வதும் வழக்கமாயிருந்தது. அன்றியும் இலங்கையை ஆண்ட சிங்கள அரசர்கள், அடிக்கடி தமிழ்நாட்டு அரசர்களின் துணையை நாடினார்கள். ஆகவே, சமயச்சார்பாகவும் அரசியல் சார்பாகவும் தமிழ்நாட்டிற்கும் இலங்கைத் தீவுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துவந்தது.

இலங்கை வரலாற்றைக் கூறுகிற **மகாவம்சம்** என்னும் நூலின் பிற்பகுதியாகிய **சூல்லவம்சம்** என்னும் நூலின்

44-ஆம் அதிகாரத்திலிருந்து இந்தக் காலத்து அரசியல் நிலையை அறியலாம். அதனைக் கூறுவோம். மகேந்திர வர்மன் காலத்தில் இலங்கைத் தீவின் அரசியல் நிலை, மிகக் குழப்பமான நிலையில் இருந்தது. அரச பதவிக்காகச் சிலர், அடிக்கடி கலகம் உண்டாக்கியும் போர்செய்தும் வந்தபடியி னாலே நாட்டில் அமைதி நிலவவில்லை. ஏறக்குறைய கி. பி. 500 முதல் 630 வரையில், அஃதாவது மகேந்திரவர்மன் பல்லவ நாட்டை அரசாண்ட அதே காலத்தில் அக்கபோதி, ஜேட்டதிஸ்ஸன், தாட்டோபதிஸ்ஸன், கஸ்ஸபன் என்னும் நான்கு அரசர்கள் இலங்கைத் தீவின் அரசாட்சிக்காகப் பல முறை போர் செயதார்கள். இவர்களைப்பற்றிய வரலாறு

**இரண்டாம் அக்கபோதி:** இவன் ஏறக்குறைய கி. பி. 601 முதல் 611 வரையில் அரசாண்டான். இவன் முதலாம் அக்கபோதியின் மகன். இவனைக் குட்ட ராசன் என்றும் குட்ட அக்கபோதி என்றும் கூறுவர். (குட்ட என்றால் இளைய என்பது பொருள்.) இவன், சங்கபத்திரை என்பவளை மணந்

இவன் காலத்தில் கலிங்கநாட்டு அரசன் அரசு துறந்து ›னைவியுடனும் அமைச்சனுடனும் இலங்கைக்கு வந்து, தூபாராம விகாரையின் தலைவராக இருந்த ஜோதிபாலர் என்னும் பௌத்தபிக்கு விடத்தில் துறவு பூண்டான். இவர்களை அக்கபோதியும் சங்கபத்திரையும் போற்றி வந் தனர். (கலிங்கமன்னன் அரசு துறந்து இலங்கைக்கு வந் ததன் காரணம், சளுக்கிய அரசன் புலிகேசி இவனுடன் போர் செய்து இவனுடைய நாட்டைக் கைப்பற் டதனால் என்று கருதப்ப(

இரண்டாம் அக்கபோதி காலஞ்சென்ற பிறகு, சங்க திஸ்ஸன் என்பவன் அரசனானான். இவன் ஏறக்குறைய கி. பி. 611 முதல் 617 வரையில் அரசாண்டான். இவன் காலத்தில் நாட்டில் இருந்த மொக்கல் லானன் என்பவன் அரசபதவிக்காக )வனுடன்



இலங்கை
பழைய பிரிவுகள்
யாழப்பாணம்
நாக நாடு
அநுரை
புலததி
மாவலி கங்கை
மலயா
கல்யாணி
உரோகணம்
கதிர்காமம்

போர்செய்தான். இருவருக்கும் போர் நடக்கும்போது, சங்கதிஸ்ஸனுடைய சேனுபதி சங்கதிஸ்ஸனையே எதிர்த்துப் போரிட்டான். இரண்டு சேனைகளுக்கிடையே அகப்பட்டுக்கொண்ட சங்கதிஸ்ஸன் போர்க்களத்தில் போராடிய போது, அவனுடைய பட்டத்து யானை ஒரு மரநிழலை நாடிச் சென்றது. அப்போது மரக்கிளை தடுத்தபடியினுலே அரசனுடைய கொற்றக்குடை கீழே விழுந்துவிட்டது. அக்குடையை மொக்கல்லானனுடைய வீரர்கள் கொண்டு போய் மொக்கல்லானனிடம் கொடுத்தார்கள். அவன் குன்றின்மேல் ஏறி நின்று அக்குடையை உயர்த்தினுன். அது கண்ட சங்கதிஸ்ஸனுடைய சேனைகள் மொக்கல்லானன் வெற்றி பெற்றதாக நினைத்து அவனிடம் போய்விட்டார்கள். இவ்வாறு தனக்குத் தோல்வி ஏற்பட்டதைக் கண்ட சங்கதிஸ்ஸன் தன் மகனுடன் அருகில் இருந்த காட்டினுள் ஓடி ஒளிந்தான்.

வெற்றிபெற்ற மொக்கல்லானன், இலங்கையின் அரசனுனுன். இவனை மூன்றும் மொக்கல்லானன் என்றும் தல்ல மொக்கல்லானன் என்றும் கூறுவர். இவன் 6 ஆண்டு அரசாண்டான். தோல்வியுற்றுக் காட்டிற்கு ஓடிய சங்கதிஸ்ஸனும் அவன் மகனும் பௌத்தபிக்குகளைபோல வேடம் பூண்டு உரோகண நாட்டிற்குப் போனுர்கள். போகும் வழியில் இவர்கள், மொக்கல்லானன் ஆட்களால் அடையாளம் கண்டறியப்பட்டுக் கொல்லப்பட்டனர். இவ்வாறு இறந்த சங்கதிஸ்ஸனுடைய இன்னெரு மகன் ஜேட்டதிஸ்ஸன் என்பவன், மலைய நாட்டில் சென்று மறைந்திருந்தான்.

மொக்கல்லானனுடைய சேனுபதி சிலாமேகவண்ணன் என்பவன். இவன் அரசனைப் பகைத்து உரோகண நாட்டிற்குப் போய்ச் சேனை யொன்றைச் சேர்த்துக்கொண்டு, மலைய நாட்டில் மறைந்திருந்த ஜேட்டதிஸ்ஸனுடன் (இவன் சங்கதிஸ்ஸனுடைய மகன்) நட்புக் கொண்டு அரசனுகிய மொக்கல்லானன் மேல் படையெடுத்துச் சென்றுன். மொக்கல்லானன் சிலாமேகவண்ணனைப் போர்க்களத்தில்

எதிர்த்தான். ஆனால் போரில் தோற்று ஓடினான். அவனைச் சிலாமேகவண்ணன் சியகிரிக்கு அருகில் கொன்றான்.

மொக்கல்லானனைக் கொன்று வெற்றிபெற்ற சிலாமேகவண்ணன், ஜேட்டதிஸ்ஸனை அநுராதபுரத்திற்கு வந்து அரச பதவியை ஏற்றுக்கொள்ளும்படி அழைத்தான். ஆனால், இவனுடைய உண்மையான நோக்கத்தை யறிந்த ஜேட்ட திஸ்ஸன், தன்னைக் கொன்று விடுவான் என்று தெரிந்து, இவனிடம் வராமலே மலையநாட்டிலேயே விட்டான். ஆகவே, சிலாமேகவண்ணன் அரசனானான்.

ஜேட்டதிஸ்ஸனுடைய அம்மாமன் சிறீநாகன் என்பவன் தமிழ் நாட்டிற்கு வந்து ஒரு சேனையைத் திரட்டிக் கொண்டு இலங்கைக்குப் போய்ச் சிலாமேக வண்ணனுடன் போர் செய்தான். ஆனால், இப் போரிலும் சிலாமேகவண்ணனே வெற்றி பெற்றான். இவன் ஒன்பது ஆண்டு அரசாண்டான். கடைசியில் நோய்வாய்ப்பட்டு இறந்தான். இவனுக்குப் பிறகு அக்கபோதி என்பவன் அரசனானான். இவனை மூன்றும் அக்கபோதி என்று கூறுவர். போதி என்றும் இவனுக்குப் பெயர்

அக்கபோதிக்கு மானு என்னும் பெயருள்ள தம்பியொருவன் இருந்தான். அக்கபோதி, மானுவைத் துணை [illegible]

னான். அக்கபோதி நெடுங்காலம் அரசாளவில்லை. அவ

வந்த ஆறுவது ல்.

ஜேட்டதிஸ்ஸன் (சங்கதிஸ்ஸனுடைய மகன்) சேனையொன்றைத் திரட்டிக்கொண்டு தாட்டாசிவன் என்னும் அமைச்சனுடன் அநுராதபுரத்தின்மேல் படையெடுத்து வந்தான். அக்கபோதி, ஜேட்டதிஸ்ஸனுடன் போர்செய்து தோற்றான். தோற்று மாறுவேடம் பூண்டு தமிழ்நாட்டில் அடைக்கலம் புகுந்தான்.

வெற்றிபெற்ற ஜேட்டதிஸ்ஸன் இலங்கையின் அரசனானான். இவனை மூன்றும் ஜேட்டதிஸ்ஸன் என்பர். இவ

னும் நெடுங்காலம் அரசாளவில்லை. ஏனென்றால், போரில் தோற்றுத் தமிழ்நாட்டிற்கு ஓடிய அக்கபோதி தமிழச் சேனையொன்றைத் திரட்டிக்கொண்டு இலங்கைக்கு வந்து ஜேட்டதிஸ்ஸனை எதிர்த்தான். இவன் அழைத்துவந்த தமிழப்படையின் தலைவன் **வெலுப்பன்** என்பவன். வெலுப் பன் என்பது வேலப்பன் என்பதன் திரிபாக இருக்கக் கூடும்.

காலவாபி என்னும் இடத்திலே அக்கபோதி அழைத்துவந்த தமிழச்சேனையை ஜேட்டதிஸ்ஸன் எதிர்த் தான். அப்போது வெலுப்பன், ஜேட்டதிஸ்ஸனுடன் போர்செய்து அவனைக் கொல்ல முயற்சித்தான். வெலுப் பனால் தான் உயிர் இழப்பது உறுதியென்றறிந்த ஜேட்ட திஸ்ஸன் தன் உடைவாளினால் தன்னைத்தானே குத்திக் கொண்டு இறந்தான். ஆகவே அக்கபோதி மறுபடியும், இரண்டாம் முறையாகத் தமிழப்படையின் உதவியினால் இலங்கைக்கு அரசனானான். இவன் அழைத்துவந்த தமிழப் படையினரில் பெரும்பாலோர் அநுராதபுரத்திலே தங்கி விட்டார்கள். இவன் முன்போலவே தன் தம்பியாகிய மானு என்பவனை துணைவேந்தனாக்கி இலங்கையை அரசாண் டான். ஆனால், மானு அரண்மனையின் அந்தப்புரத்திலே கூடாவொழுக்கமாக நடந்துகொண்டபடியால் அவன் சிரச் சேதம் செய்யப்பட்டான். ஆகவே மற்றொரு தம்பியாகிய **கஸ்ஸபன்** என்பவனைத் துணைவேந்தனாக்கினான்.

போர்க்களத்திலே உயிரைவிட்ட ஜேட்டதிஸ்ஸனு டைய அமைச்சனான **தாட்டாசிவன்**, தன்னுடைய அரசன் இறந்துவிட்டபடியாலும், அக்கபோதி வெற்றியடைந்தபடி யாலும் தனக்கு இலங்கையில் செல்வாக்கு இல்லையென் பதையறிந்து தமிழ்நாட்டில் சென்று அடைக்கலம் புகுந் தான். அடைக்கலம் புகுந்த தாட்டாசிவன் அக்க போதியை வென்று இலங்கையரசைத் தான் அடைவ தற்குச் சமயம் பார்த்திருந்தான். இச்சமயத்தில் மானு என்னும் உபராசன் கொல்லப்பட்டான் என்பதைக் கேள் விப்பட்டு உடனே புதியதோர் தமிழச்சேனைகளை அழைத்

துக்கொண்டு இலங்கைக்குச் சென்று அநுராதபுரத்திற்கு அருகில் உள்ள திந்திணி என்னும் ஊரில் பாசறை யமைத்தான்.

தாட்டாசிவன் தமிழப்படையுடன் தமிழ்நாட்டி லிருந்து போருக்கு வந்த செய்தியை அறிந்த அக்கபோதி, சேனையுடன் சென்று அவனுடன் போர்செய்தான். இந்தப் போரில் தாட்டாசிவன் வெற்றியடைந்து அக்க




தமிழ்நாடும் இலங்கையும்

போதி தோல்வியுற்றான். தோல்வியடைந்த அக்கபோதி, முடி முதலிய அரச சின்னங்களையெல்லாம் விட்டுவிட்டு, ஏகாவலி என்னும் பெயருள்ள முத்துமாலை ஒன்றைமட்டும் எடுத்துக்கொண்டு தமிழ்நாட்டிற்கு ஓடினான். தமிழச் சேனையினால் வெற்றிபெற்று அரசாட்சியைக் கைப்பற்றிய தாட்டாசிவன், ஏகாவலி என்னும் முத்துவடம் ஒன்று தவிர மற்ற அரச சின்னங்களை அணிந்து

அரசனானான். அரசனான பிறகு தாட்டாசிவன் தன் பெயரைத் தாட்டோபதிஸ்ஸன் என்று மாற்றிக்கொண்டான். இவன் தமிழ்நாட்டில் எங்கிருந்து தமிழச்சேனைகளை அழைத்துவந்தான் என்பது தெரியவில்லை. பாண்டிய நாட்டிலிருந்து அழைத்துவந்திருக்கக்கூடும்.

தோற்று ஓடிய அக்கபோதி தமிழ்நாட்டிலே எந்த அரசனிடம் அடைக்கலம் புகுந்தான் என்பது தெரியவில்லை. ஆனால், தமிழப்படையை அழைத்துக்கொண்டு இலங்கைக்கு வந்து தாட்டோபதிஸ்ஸனுடன் போர் செய்தான். இந்தப் போரில் அக்கபோதி வெற்றியடைந்து தாட்டோபதிஸ்ஸன் தோல்வியடைந்தான். ஆகவே, அக்கபோதி மூன்றாவது முறையாக மீண்டும் அரசனானான். போரில் தோற்று அரசை இழந்த தாட்டோபதிஸ்ஸன் மீண்டும் படைதிரட்டத் தமிழ்நாடு சென்றான். இவ்வாறு தாட்டோபதிஸ்ஸனும் அக்கபோதியும் பலமுறை போர் செய்து, தோற்பதும் வெல்வதும் அரசாள்வதும் அரசு துறப்பதுமாக மாறிமாறி இலங்கையை அரசாண்டார்கள். இவர்கள் தமிழ்நாட்டிலிருந்து அடிக்கடி போர்வீரர்களை அழைத்துக்கொண்டு வந்தபடியால், தமிழவீரர்கள் அநுரையில் அதிகமாகக் குடியேறினார்கள். அநுராதபுரத்தில் தமிழர்களின் செல்வாக்கு அதிகமாயிற்று.

அக்கபோதியும் தாட்டோபதிஸ்ஸனும் மாறிமாறிப் போர்செய்துகொண்டிருந்தபடியால், போரின் காரணமாக நாட்டிலே வறுமை உண்டாயிற்று. நாட்டுமக்கள் பொருளை இழந்து துன்பப்பட்டனர். நிலபுலங்கள் விளையாமல் மக்கள் அல்லல் அடைந்தார்கள். அடிக்கடி போர் செய்தபடியினாலே அரசர்களிடம் பொருள் இல்லாமற் போயிற்று. ஆகவே, அவர்கள் பௌத்தப்பள்ளிகளிலும் விகாரைகளிலும் இருந்த பொன்னையும் பொருளையும் கவர்ந்து அப் பொருள்களைப் போருக்காகச் செலவுசெய்தார்கள்.

தாட்டோபதிஸ்ஸன் **மகா விகாரை**, **அபயகிரி விகாரை**, **ஜேதவன விகாரை** என்னும் விகாரைகளில் இருந்த பொன்

னையும் பொருளையும் கவர்ந்துகொண்டதோடு, தாகோப (தாதுகர்ப்பம்) என்னும் பௌத்தப்பள்ளிகளில் இருந்த விலையுயர்ந்த பொருள்களையும், பொன் நகைகளையும், பொன்னால் செய்யப்பட்டிருந்த புத்த விக்கிரகங்களையும் கவர்ந்து கொண்டான். தூபாராமம் என்னும் பள்ளியில் இருந்த பொன் கலசங்களையும் அதைச்சேர்ந்த சேதியத்தில் அமைத்திருந்த நவரத்தினங்கள் பதித்த பொற்குடையையும் கவர்ந்துகொண்டான். இவ்வாறு இவன் பௌத்தப் பள்ளிகள், பௌத்த விகாரைகள் முதலியவற்றில் இருந்த செல்வங்களைக் கவர்ந்து அவைகளைப் போருக்காகச் செலவு செய்தான்.

இவ்வாறே அக்கபோதியும் புத்த விகாரைகளில் ந்த பொருள்களைக் கவர்ந்துகொண்டான். அக்கபோதியின் தம்பியாகிய கஸ்ஸபன் (உபராசன்), தூபாராம சேதியத்தைத் திறந்து, அதற்கு முன்னைய அரசர்கள் தானமாக வழங்கியிருந்த பொன்னையும் பொருளையும் கவர்ந்துகொண்டான். தக்கிண விகாரையிலிருந்த சேதியங்களுக்குரிய பொன்னையும் நிதிகளையும் கவர்ந்தான்.

இவ்வாறு இந்த அரசர்கள் தமக்குள் அடிக்கடி செய்து வந்த போர்களுக்காகப் பௌத்த மடங்களையும் பௌத்தக் கோயில்களையும் கொள்ளையிட்டு அவற்றின் பொருள்களைக்

கடைசியாகத் தாட்டோபதிஸ்ஸன் அக்கபோதியை வென்று மீண்டும் அரசனானான். தோற்றுப்போன அக்கபோதி, உரோகண நாட்டிற்குச் சென்றான்; அங்கே நோய்வாய்ப்பட்டு இறந்தான். அக்கபோதி இறந்த பிறகும் தாட்டோபதிஸ்ஸன் அமைதியாக அரசாள முடியவில்லை. ஏனென்றால், அக்கபோதியின் தமபியும் உபராசனுமாக இருந்த கஸ்ஸபன் படையெடுத்து வந்து போர்செய்து தாட்டோபதிஸ்ஸனை வென்றான். போரில் தோற்ற தாட்டோபதிஸ்ஸன் பொன்முடி மணிவடம் முதலிய அரச சின்னங்களைத் தன்னுடன் எடுத்துக்கொண்டு போய்விட்

டான. வெற்றிபெற்ற கஸ்ஸபன், அரச அணியாமலே இலங்கைக்கு மன்னனான கஸ்ஸபனை, இரண்டாங் கஸ்ஸபன் என்று சரித்திர நூலோர் கூறுவர்.

கஸ்ஸபன [illegible] அரசனை சில ஆண்டு கழித்துத் தோற்று ஓடிய தாட்டோபாதிஸ்ஸன் படை திரட்டிக்கொண்டு போருக்கு வந்தான். கஸ்ஸபன் அவனை எதிர்த்துப் போர்செய்தான். இந்தப் போரில் தா[illegible]டாபதிஸ்ஸன இறந்துபோனான். ஆகவே, கஸ்ஸபனே இலங்கையை அரசாண்டுவந்தான்.[1]

போரில் இறந்த தாட்டோபாதிஸ்ஸனுடைய தங்கை மகனும் உபராசனாக இருந்தவனும் ஆன ஹத்ததாதன் என்பவன் போர்க்களத்தில் உயிர் தப்பிப்பிழைத்துத் தமிழ் நாட்டிற்கு ஓடிவந்து அடைக்கலம்புகுந்தான்.

மகேந்திரவர்மன் காலத்திலே இலங்கைத் தீவின் அரசியல் நிலை இது. இதனால், இலங்கை அரசியலில் மறைமுகமாகத் தமிழ்நாட்டின் தொடர்பும் இருந்துவந்ததை அறிகிறோம். அக்காலத்தில் இலங்கையின் தலைநகரமான அநுராதபுரத்தில் தமிழ் வீரர்களின் செல்வாக்கும் ஆதிக்கமும் அதிகமாக

1. இந்தக் கஸ்ஸபன் மகன் மானவம்மா என்பவன். மானவம்மா பிற்காலத்தில் அரசாட்சி இழந்து, காஞ்சிபுரத்திற்கு வந்து, மகேந்திரவர்மன் மகனான மாமல்லன் என்னும் நரசிம்ம வர்மனிடம் அடைக்கலம் புகுந்தான்.

# ௩. சமயநிலை

## 1. சமண சாக்கிய மதங்கள்

மகேந்திரவர்மன் காலத்திலே தமிழ்நாட்டிலே சமண சமயமும் சாக்கிய மதமும் செழித்திருந்தன. சமண சமயம் என்பது, ஆருகத மதம்; அஃதாவது ஜைன சமயம். சாக்கிய மதம் என்பது, பௌத்த சமயம். இந்த இரண்டு சமயங்களும் சேர சோழ பாண்டியநாடு என்னும் மூன்று தமிழ்நாடுகளிலும் பரவி நிலைகொண்டிருந்தன. இந்த மதங்களை மக்கள் பெருவாரியாக ஆதரித்தார்கள். சமணருடைய பள்ளிகளும் பாழிகளும், பௌத்தருடைய பள்ளிகளும் விகாரைகளும் நாடெங்கும் ஊரெங்கும் நிறைந்திருந்தன. சமணத் துறவிகளும் பௌத்தப் பிக்குகளும் எங்கும் நிறைந்திருந்தனர். இந்த நிலையைச் சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் நன்றாக விளக்கிக் கூறுகிறார். ஞானசம்பந்தருடைய தந்தையாராகிய சிவபாத விருதயர், நாட்டில் சைவம் குன்றியிருந்ததையும் சமண சாக்கியம் பெருகியிருந்ததையும் கண்டு மனம்வருந்தினர் என்று ...ழார் இவ்வாறு கூறுகிறார் :—

மேதினிமேல் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம் மிகுத்தே
ஆதியரு மறைவழக்கம் அருகியரன் அடியார்பால்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெற தோழியக்கண்டு
ஏதமில்சீர்ச் சிவபாத இருதயர்தாம் இடருழந்தார்.

(திருஞான ம் - கஅ.)

யா ம ரவாமன் காலத்தில் இருந்தவா. ஆனால், ஞானசம்பந்தர் இவருக்கு மகனாக இன்னும் பிறக்கவில்லை. நாவுக்கரசரும் இக்காலத்தில் இருந்தவராவா. தொண்டைநாட்டையும் சோழநாட்டையும் அரசாண்ட மகேந்திரவர்மனே சமண சமயத்தவனாக தான். பிற்காலத்தில் இவன் நாவுக்கரசரால் சைவசமயத்தில் சேர்க்கப்பட்டான்.

இவ்வாறே பாண்டியநாட்டிலும் சமணசமயம் பெருகிச் சைவசமயம் குன்றியிருந்ததைச் சேக்கிழார் கூறுகிறார்:—

பூழியர் தமிழ்நாட் டுள்ள பொருவில்சீர்ப் பதிகள் எல்லாம்
பாழியும் அருகர் மேவும் பள்ளிகள் பலவும் ஆகிச்
சூழிருட் குழுக்கள் போலத் தொடைமயிற் பீலி யோடு
மூழிநீர் கையிற் பற்றி அமணரே யாகி மொய்ப்ப."

"பறிமயிர்த் தலையும் பாயும் பீலியும் தடுக்கும் மேனிச்
செறியுமுக் குடையு மாகித் திரிபவர் எங்கும் ஆகி
அறியுமச் சமய நூலின் அளவினில் அடங்கிச் சைவ
நெறியினிற் சித்தஞ் செல்லா நிலைமையில் நிகழுங் காலை."
(திருஞானம் - கூ0க-உ.)

இக்காலத்தில் பாண்டியநாட்டை அரசாண்ட மன்னன் செங்கோற்சேந்தன்.

இவ்வாறு தமிழ்நாடு முழுவதும் சமணசமயமும் பௌத்தமதமும் பெருகிச் செழித்திருந்தன; சைவ வைணவ சமயங்கள் குன்றியிருந்தன.

## 2. சைவ வைணவ மதங்கள்

சமண சாக்கிய மதங்கள் சிறப்புற்றிருந்தன என்று சொன்னால், மற்றச் சைவ வைணவ மதங்கள் இல்லாமற் போயின என்று கருதக்கூடாது. அக்காலத்தில் சைவ வைணவ சமயங்களும் இருந்தன. சைவக் கோயில்களும் வைணவக் கோயில்களும் ஆங்காங்கே தமிழ்நாட்டில் இருந்தன. ஏன்? சைவ மடங்கள் கூட சிற்சில இடங்களில் அக்காலத்தில் இருந்தன என்பதற்குச் சான்றுகள் உள்ளன. ஆனால், சைவ வைணவச் சமயங்கள் சிறப்புப் பெறாமல் இருந்தன.

### சைவ சமயப் பிரிவுகள்

அக்காலத்திலே சைவசமயத்தில் காபாலிகம், பாசுபதம், பைரவம் முதலான பிரிவுகள் இருந்தன. என்னை?

"விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் கபாலிகள்
தெருவினிற் பொலியும் திருவாரூர் அம்மானே."

என்றும்,

"வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்த னாரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்."

என்றும்,

"தலையிற் றரித்தவென்புத் தலைமயிர் வடமும்பூண்ட
விலையிலா வேடர்வீழி மிழலையுள் விகிர்த னாரே."

என்றும்,

"தலையறுத்த மாவிரதம் தரித்தான் தன்னை."

"பசுபதியைப் பாசுபத வேடத்தானை."

"பஞ்சவடி[1] மார்பினானை."

என்றும் மகேந்திரவர்மன் காலத்தில் இருந்த திருநாவுக்கரசர் தமது தேவாரத்தில் கூறுவது காண்க. மகேந்திர வர்மனும் தான் எழுதிய மத்தவிலாசப் பிரஹசனம் என்னும் நூலிலே, திருவேகம்பத்தில் காபாலிகர், பாசுபதர் இருந்த செய்தியைக் கூறுகிறான். இவற்றினால் அக்காலத்தில் இந்த மதங்கள் இருந்தன என்பது தெரிகிறது.

## 3. பக்தி இயக்கம்

பௌத்த சமண மதங்கள் பெருகிச் சைவ வைணவ மதங்கள் குன்றியிருந்தபோதிலும் அக்காலத்தில் பக்தியியக்கம் தோன்றியிருந்தது. பிற்காலத்திலே சைவ வைணவ சமயங்கள் செழித்து வளரவும் பௌத்த சமண மதங்கள் குன்றி மறையவும் காரணமாக இருந்தது இந்தப் பக்தி இயக்கந்தான். சைவ நாயன்மார்களும் வைணவ அடியார்களும் இந்தப் பக்தி இயக்கத்தைப் பரவச் செய்தார்கள். மகேந்திரவர்மன் காலத்தில் சமயப் பூசல்

1. பஞ்சவடி என்பது மாவிரத சமயத்தார் பூணும் மயிர்ப்

கள் மும்முரமாக நிகழ்ந்தன. சமண சமயம், பௌத்த மதத்தையும் சைவ வைணவ சமயங்களையும் தாக்கிற்று. அவ்வாறே பௌத்த மதம் சமணமதத்தையும் சைவ வைணவ மதங்களையும் தாக்கிற்று. அங்ஙனமே சைவ வைணவ சமயங்கள் சமண சமயத்தையும் பௌத்த மதத்தையும் தாக்கின. நாளடைவில் பக்தி இயக்கம் வெற்றி பெற்றது. சமண பௌத்த மதங்கள் குன்றத் தொடங்கின.

மகேந்திரவர்மன் காலத்தில் பௌத்த மதத்தையும் சமண மதத்தையும் எதிர்த்துச் சைவசமயத்தை ஆதரித்துப் பக்தியைப் பரவச்செய்தவர் திருநாவுக்கரசு நாயனார். இவர் சைவசமயப் பிரசாரம் செய்யத்தொடங்கியது இவருடைய வயோதிக காலத்தில். முதன்முதலாகச் சைவ சமயப்பிரசாரம் செய்யக்கிளம்பி ஊர்ஊராகச் சுற்றுப் பிரயாணம்செய்து சைவத்தை நிலைநாட்டியவர் இவரே. ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகளாக இவர் தமது முதுமைக்காலத்தில் சமயத்தொண்டு செய்து தமது 81-ஆவது வயதில் சிவகதியடைந்தார்.

## 4. திருநாவுக்கரசர்

திருநாவுக்கரசர், திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூர் என்னும் ஊரில் இருந்த புகழனார், மாதினியார் என்பவர்களுக்கு மகனாகப் பிறந்து மருணீக்கியார் என்னும் பெயருடன் வளர்ந்து வந்தார். சைவசமயத்திலே பிறந்த இவர் இளமையில் கல்வியை நன்குகற்றுத் தேர்ந்தார். வாலிபப் பருவத்திலே பெற்றோரை இழந்தார். உண்மைச் சமயம் எது என்பதை யறிய ஆவல் கொண்டு பல சமயக் கொள்கைகளை ஆராய்ச்சி செய்தார். அக்காலத்தில் பாடலிபுரம்[1] என்னும் இடத்தில் இருந்த, பேர்போன சமண

1. பாடலிபுரம், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் இருக்கிறது. இங்கிருந்த சமணப்பள்ளி அக்காலத்தில் பேர்போன மடமாக இருந்தது. இந்தச் சமணப் பள்ளியில்தான் லோகவிபாகம் என்னும் நூலைச் சர்வநந்தி என்பவர் சக ஆண்டு 380 இல் எழுதி

மடத்தில் சேர்ந்து சமண சமய நூல்களையெல்லாம் துறை போகக் கற்றுத் தேர்ந்தார்.

இவருடைய சமய அறிவையும் கல்வி யறிவையும் கண்ட சமணர்கள் இவரைத் தம் மதகுருவாக அமைத்துத் தருமசேனர் என்னும் பெயர் கொடுத்துப் போற்றினார்கள். தருமசேனர் பாடலிபுரத்துப் பள்ளியிலே சமண சமயத் தலைவராக இருந்தார். நெடுங்காலம் சமண குருவாக இருந்து தமது வாழ்நாளின் பெரும்பாகத்தை அங்கே கழித்தார்.

தருமசேனருடைய முதுமைப் பருவத்தில் இவருக்குக் கொடிய சூலைநோய் கண்டது. அந்நோய் நாளுக்கு நாள் கடுமையாக இருந்தது. மணி மந்திர மருந்துகளினாலும் இவருடைய சூலைநோய் தீரவில்லை. நோயின் துன்பத்தை இவர் தமது திருவதிகைப் பதிகத்தில் நன்கு விளக்கிக் கூறுகிறார். "தோற்றாதென் வயிற்றி னகம்படியே குடரோடு தொடக்கி முடக்கியிட ஆற்றேன்." என்றும், "சுடுகின்றது சூலை" என்றும், "பயந்தே யென்வயிற்றி னகம்படியே பறித்துப் புரட்டி யறுத்து ஈர்த்திட நான் அயர்ந்தேன்" என்றும், "கலித்தே யென் வயிற்றி னகம் படியே கலக்கிமலக்கிட்டுக் கவர்ந்து தின்ன அலுத்தேன்" என்றும் இவர் கூறுவதிலிருந்து இந்நோயின் கொடுமையை நன்கறியலாம்.

இந்நோய் தீராதென்று கைவிடப்பட்ட இவர், நோய் பொறுக்க முடியாத நிலையில், தம் தமக்கையாரான திலகவதியார் இருந்த திருவதிகை என்னும் ஊருக்குச் சென்று அவரைக்கண்டார். தமக்கையார், சிவபெருமானை

முடித்தார். அஃதாவது கி. பி. 458-இல் சிம்மவர்மன் என்னும் பல்லவ மன்னன் காஞ்சிபுரத்தை அரசாண்டிருந்த காலத்தில் அவ்வரசனுடைய 22-ஆவது ஆட்சி ஆண்டில் லோகவிபாகம் பாகத மொழியிலிருந்து வடமொழியில் மொழிபெயர்க்கப் பட்டது. (Mys. Archl. Rep. 1909-10, Para. 112) அதாவது நாவுக்கரசர் பிறப்பதற்கு 160 ஆண்டுகளுக்கு முன்னே இந்நூல் இந்தப் பள்ளியில் மொழி பெயர்க்கப்பட்டது.

வழிபட்டால் சூலைநோய் தீரும் என்று கூற இவர் சைவசமயத்தில் சேர்ந்து சிவபெருமானை வழிபட்டார். அப்போது அவருக்கிருந்த சூலைநோய் நீங்கி விட்டது. அதுமுதல் இவர் சைவசமயத்தையும் பக்தியியக்கத்தையும் பரவச் செய்வதில் தமது வாழ்நாட்களைக் கழித்தார். தருமசேனர், சமண சமயத்தை விட்டுச் சைவ சமயத்திற்கு வந்த பின்னர், இவருக்குத் திருநாவுக்கரசர் என்னும் பெயர் சூட்டினார்கள். வடமொழியாளர் திருநாவுக்கரசர் என்னும் பெயரை வாகீசர் என்று மொழி பெயர்த்துக் கொண்டார்கள்.

திருநாவுக்கரசர் சைவசமயத்திற்கு வந்து பக்தி இயக்கத்தைப் பிரசாரம் செய்தது, இவரது இளமை கழிந்த முதுமைப் பருவத்திலாகும். இதனை இவர் தமது பாடல்களிலே குறிப்பிட்டிருக்கிறார். இவர் சமணசமயத்தை விட்டுச் சைவசமயத்தில் புகுந்தபோது இவருக்கு வயது ஐம்பதைந்து அல்லது அறுபது க்கலாம.

"முன்பெலாம் இளைய காலம்
மூர்த்தியை நினையா தோடிக்
கண்கண இருமி நாளும்
கருத்தழிந் தருத்த மின்றிப்
பின்பகல் உணங்கல் அட்டும்
பேதைமார் போன்றேன் உள்ளம்
அன்பனாய் வாழ மாட்டேன்

(திருவதிகை வீரட்டம். நேரிசை. க.)

"பாலனாய்க் கழிந்த நாளும்
பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும்
மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும்
குறிக்கோளி லாது கெட்டேன்
ூலாம் பழன வேலித்
திருக்கொண்டீச் சரத்து ளானே"

(திருக்கொண்டீச்சரம். திருநேரிசை. க.)

ஒன்ற வினையை நோக்கி
வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற வினையைப் போக
முயல்கின்றேன் இயல வெள்ளந்
திளைக்கின்ற முடியி னான்றன்
திருவடி பரவ மாட்டாது
இளைக்கின்றேன் இருமி யூன்றி
என்செய்வான் தோன்றி னேனே."

கோதை நல்லார்
தங்களோ டின்ப மெய்த
மல்லேன் எந்தாய்
செய்வான் ன.

' தடியொடுங்கி வந்தடைந்தேன்
ரிப்பாய் பிழைப்ப வெல்லாம்."

என்று இவரே தம்மைப்பற்றிக் கூறுவது காண்க. வ வாறாக, சமணசமயத்தைவிட்டுச் சைவமதத்தைச் சேர்ந்த பின்னர், திருநாவுக்கரசர் திருமணம் செய்து கொண்டு மக்களைப் பெற்றுக் குடும்பத்தோடு வாழ்ந்திருந்து பின்னர் மீண்டுந் துறவுபூண்டிருக்க வேண்டும் என்று ஒரு ஆராய்ச்சிக்காரர் எழுதுகிறார்.[1]

இதற்கு இவர் காட்டும் சான்று என்னவென்றால்,

"மக்களே மணந்ததார மவ்வயிற் றவரை யோம்புஞ்
சிக்குளே யழுந்தி யீசன் றிறம் படேன் தவமதோரேன்."

என்னும் குறைந்த நேரிசை (உ) செய்யுளாகும். இதனை ஆதாரமாகக் கொண்டு, நாவுக்கரசர் திருமணம் செய்து கொண்டு பிள்ளைப்பேற்றுடன் வாழ்ந்தார் என்று இவர் கூறுவது பொருந்தாது. நாவுக்கரசர் திருமணஞ் செய்து

1. Origin and early History of Saivism in South India. by C. V. Narayana Ayyar, Page, 390.

கொண்டார் என்று பெரியபுராணம் கூறவில்லை. மேலும் இளமை கழிந்த முதிய வயதில் இவர் சைவரானார் என்பதே துணிபு. திருமணஞ்செய்து இல்லறத்தில் வாழ்ந்திருந்தார் என்பதற்கு இவர் மேற்கோள் காட்டுகிற அதே குறைந்த நேரிசைப் பதிகத்தின் ௯-ஆவது பாடலில்,

“ தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்ப மெய்த
இளையனு மல்லே னெந்தாய் என் செய்வான் தோன்றி ”

என்று கூறுவது இக்கருத்துக்கு மாறுபடு

நாவுக்கரசர் சமணசமயத்தைவிட்டுச் சைவசமயத்துக்கு வந்த செய்து கொண்டிருந்தால், அதனைத் தவறாமல் பெரியபுராணம் கூறுமன்றோ? அவ்வாறு கூறாதபடியினாலும், சைவசமயத்துக்கு வந்தபோது முதிய வயதினராகையினாலும் இவர் திருமணஞ்செய்துகொண்டார் என்பது சிறிதும் பொருந்தாது. அப்படியானால், நாவுக்கரசர் வாக்கினாலேயே அகச்சான்று இருக்கிறதே; ஆகவே, மணம் செய்து கொண்டார் என்பது உண்மைதானே என்று மக்கள் கருதுவர். அவ்வாறு கருதுவது தவறு. அடியார்கள், மனைவிமக்கள் இல்லாதவர்களாயிருந்தாலும் குடும்பப்பாசம் உடையவர் போல ஆண்டவனிடம் முறையிடுவது மரபு. இந்த மரபையொட்டிப் பாடிய ஒரு செய்யுளை மட்டும் ஆதாரங் காட்டி, இவர் மணஞ்செய்துகொண்டு வாழ்ந்தார் என்று கூறுவது பொருந்தாது. ஏனைய சான்றுகள், மணஞ்செய்து கொண்டார் என்பதற்கு மாறுபடுகின்றன. கவி மரபு பாராமல், ஏனைய சான்றுகளையும் ஆராயாமல் ஏதோ ஒரு ஆதாரத்தை மட்டும் மேற்கோள் காட்டி ஒரு கருத்தை நிலை நாட்ட “ஆராய்ச்சி”யாளர்கள் முற்படுவார்களானால், அது பெருங்கேடாக முடியும். உதாரணமாக ஒன்று கூறுவோம்:

காரைக்கால் அம்மையார் என்பவர் பெண்பாலார் என்பது எல்லோரும் அறிந்த செய்தி. இவ்வம்மையார் இயற்றியுள்ள திருவிரட்டைமணிமாலையில்,

*னையா தொழுதிகண் டாய்நெஞ்ச மேயங்கோர் தஞ்சமென்று*
*மனையாளை யுமக்க டம்மையுந் தேறியோ ராறுபுக்கும்*
*நனையாச் சடைமுடி நம்பனந் தாதைதொந் தாதசெந்தீ*
*யனையா னமரர் பிரானண்ட வாண னடித்தலமே.*

என்று பாடியுள்ளார். பெண்பாலாராகிய அம்மையார், இப்பாடலில் மனையாளையும் மக்கள்தம்மையும் என்று கூறியுள்ளது கொண்டு, இது அவரே கூறிய அகச்சான்று ஆகையால், "காரைக்காலம்மையார் பெண்பாலார் அல்லர்; ஆண் மகன். அவர் பெண்ணாக இருந்தால் கணவனையும் மக்களையும் என்று கூறியிருப்பார். அப்படிக் கூறாமல் மனையாளையும் மக்களையும் என்று கூறியபடியால் காரைக்கால் அம்மையார் ஆண்மகனே" என்று ஓர் ஆராய்ச்சியாளர் கிளம்புவாரானால் எப்படியிருக்கும்! ஆகவே கவி மரபாகவோ அன்றி வழுவமைதியாகவோ கவிஞர்கள் கூறிய செய்திகளைப் பகுத்தறிவு கொண்டும் ஏனைய சான்று கொண்டும் ஆராயாமல் மனம்போனவாறு கூறத்துணிவது உண்மைக்கு மாறுபட்ட தவறான முடிபாகும். நிற்க.

சமணசமயத் தலைவராக இருந்தபோது தருமசேனர் என்று பெயர்பெற்றிருந்த மருணீக்கியார், சைவசமயத்தில் சேர்ந்தபோது நாவுக்கரசர் என்னும் பெயர் பெற்றார் என்று கூறினோம். பிற்காலத்திலே இவருடன் சேர்ந்து சைவசமயத்தைப் பரப்பிய இவருக்கு மிக இளையரான ஞானசம்பந்தர், இவரை முதன்முதல் கண்டபோதும் அதன் பிறகும் இவரை "அப்பரே" என்று அழைத்தார். அதாவது தந்தைபோன்ற பெரியவர் என்பது பொருள். ஆகவே, சம்பந்தர் காலத்தில் நாவுக்கரசர் மிக்க வயது முதிர்ந்தவராக இருந்தார் என்பது இதனால் தெரிகிறது.

## 5. மகேந்திரன் சைவனானது

நாவுக்கரசர், சமணசமயத்தவனாக இருந்த மகேந்திர வர்மனைச் சைவசமயத்தில் சேர்த்தார் என்று கூறுவர். இதற்குப் பெரியபுராணச் செய்யுள் ஆதாரமாகக் காட்டப்படுகிறது. ஆனால், பெரியபுராணம் மகேந்திரன் பெயரைக்

கூறவில்லை; பல்லவ அரசர்களின் பொதுப்பெயராகிய **காடவன், பல்லவன்** என்னும் பெயர்களை மட்டும் கூறுகிறது. காடவ அரசன் சைவசமயத்தைச் சேர்ந்தபிறகு பாடலிபுரத்திலிருந்த சமணப்பள்ளியை, (அப்பர் தருமசேனர் என்னும் பெயருடன் தங்கியிருந்த அதே சமணப் பள்ளியை) இடித்து அந்தக் கற்களைக் கொண்டுபோய் திருவதிகைச் சிவன் கோயிலிலே **குணதரவீச்சரம்** என்னும் கோயிலைக் கட்டினான் என்று பெரியபுராணம் கூறுகிறது.

> வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
> காடவனும் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
> பாடலிபுத் திரத்தில்அமண் பள்ளியொடு பாழிகளும்
> கூடஇடித் துக்கொணர்ந்து **குணதரவீச் சரம்**எடுத்தான்

என்பது அச்செய்யுள்.

இப் பெரியபுராணச் செய்யுளில் சேக்கிழார் **குணதரவீச்சரம்** என்று கூறியுள்ளார். குணதரன் என்னும் அரசன் கட்டிய கோயில் என்பது இதன் பொருள். **குணதரன்** என்னும் பெயர் குணபரன் என்னும் பெயரின் மரூஉ என்றும், ஆகவே குணபரன் குணதரன் என்னும் இரண்டு சொற்களும் ஒரே அரசனைக் குறிக்கின்றன என்றும், இப் பெயர்கள் மகேந்திரவர்மனுடைய சிறப்புப் பெயர்கள் என்றும், ஆகவே அப்பரால் சைவனாக்கப்பட்டவன் மகேந்திரவர்மன்தான் என்றும், அவ்வரசன் தனது சிறப்புப் பெயராகிய குணதரன்[1] (குணபரன்) என்னும் பெயரால்

1. பெரியபுராணம் பாடிய சேக்கிழார் குணதரவீச்சரம் என்று கூறியிருக்கிறார். பெரியபுராணப் பதிப்புகள் எல்லாவற்றிலும் குணதரவீச்சரம் என்றே காணப்படுகிறது. பெரியபுராண வசனம் எழுதிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களும் குணதரவீச்சரம் என்றே எழுதியிருக்கிறார். ஆனால், 1950-ஆம் ஆண்டில் (விக்ருதி ஆண்டு ஆவணி மூலநாள்) திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தார் வெளியிட்ட பெரியபுராணத்தில் குணதரவீச்சரம் என்னும் பெயர் **குணபரவீச்சரம்** என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த மாற்றத்திற்குக் காரணம் கூறப்படவில்லை.

குணதரவீச்சரம் கட்டினான் என்றும் சரித்திர ஆராய்ச்சிக் காரர் கூறுவர்.

வல்லம் குகையில் உள்ள தமிழ் எழுத்து.
" குணபரன் " என்பது இதன் வாசகம்.

திருவதிகையில் குணதரவீச்சரம் கட்டிய காடவனாகிய பல்லவ அரசன் முதலாம் மகேந்திரவர்மன் ஆவன் என்றும், அவனைத்தான் நாவுக்கரசர், சமணமதத்திலிருந்து சைவமதத்திற்கு மாற்றினார் என்றும், நாவுக்கரசரும் மகேந்திரவர்மனும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள் என்றும் முதன் முதலாக ஆராய்ந்து கூறியவர் திரு. வி. வெங்கையா அவர்களாவார். அவர் ஆங்கிலத்தில் எழுதிய கட்டுரையின் சுருக்கம் இது :—

திருநாவுக்கரசர் அல்லது அப்பர் என்பவருடைய காலத்தில் இருந்த திருஞானசம்பந்தர் அப்பருக்கு இளை

இக்காலத்துச் சரித்திர ஆராய்ச்சிக்காரர்களின் ஆராய்ச்சியை ஆதாரமாகக்கொண்டு இச்சொல் இவ்வாறு மாற்றப்பட்டது போலும்.

இதுபோலவே, சில ஆண்டுகளுக்கு முன்னர்த் தேவாரத்தைப் பதிப்பித்த சைவப் பெரியார் ஒருவர், நாவுக்கரசர் தேவாரத்தில் " குலங்கெடுத்துக் கோணீக்க வல்லான் தன்னை " என்ற அடியை மாற்றி, "குலங்கொடுத்துக் கோணீக்க வல்லான்தன்னை" என்று தம் விருப்பப்படி மாற்றி அச்சிட்டிருக்கிறார்.

பதிப்பாசிரியர்கள் நூலிலுள்ள சொல்லையோ அடியையோ மாற்றினால் அதற்குக் காரணம் கூறவேண்டுவது முறையாகும். காரணங்கூறாமலே ஒவ்வொருவரும் ஒவ்வொரு நூலில் சொற்களை மாற்றியமைப்பது பெருந்தவறாகும். சைவத்திற்கும் தமிழிற்கும் தொண்டு செய்வதாகாது.

இவ்வாறு சித்திரகாரப்புலி என்னும் பெயரைச் சூடியிருந்தபடியினாலே மகேந்திரவர்மன் சித்திரக் கலையை நன்கு பயின்றவன் என்பதை அறியலாம். அது மட்டுமன்று. தக்ஷிண சித்திரம் என்னும் ஓவிய நூலுக்கு இந்த அரசன் உரை ஒன்று எழுதினான் என்னும் செய்தியும் அறிகிறோம். மாமண்டூர்க் குகைக்கோயிலிலே இவனைப் பற்றி எழுதியுள்ள சாசனத்திலே, (இப்போது இந்தச் சாசனம் சிதைந்துள்ளது.) 11, 12-ஆவது வரிகளில்

“ .........கல்பாத் ப்ரவிபஜ்ய.........வ்ருத்திம..
தக்ஷிண சித்ராக்யம் (கார) யித்வா ய்தா
.........ஸ்ச விவிதைஹ் க்ருத்வா வர்ண சதுர்த்த

என்று எழுதப்பட்டுள்ளது.

1. சித்திரகாரப் புலி. 2. சித்ரகார புலி.

இதனால், தக்ஷிண ப்பற்றிய ஓர் ஓவிய நூலுக்கு இவன் உரை எ ன் என்று அறிஞர்கள் ர்கள்.

தக்ஷிண சித்திரம் என்பது பரத கண்டத்தின் தென் பகுதியில் வழங்கிய ஓவியங்களைக் குறிக்கிறது போலும். ஏனென்றால், தக்கிண இந்தியாவில் இருந்து தெற்கே இலங்கைவரையில் ஒரேவிதமான ஓவியக்கலை வளர்ச்சி பெற்றிருந்ததாகத் தெரிகிறது. அஃதாவது வடக்கே பாக் குகை, அஜந்தாக் குகைகளில் காணப்படுகிற ஓவியங்களும்

தமிழ்நாட்டிலே காணப்படுகிற ஓவியங்களும் இலங்கையில் சிகிரியா மலைக்கோட்டையில் காணப்படுகிற ஓவியங்களும் ஒரேவித பண்புடையனவாய்க் காணப்படுகின்றன என்று ஓவியநூற் புலவர்கள் கூறுகிறார்கள். இந்தத் தக்கிண சித்திரங்கள், அந்தந்த நாட்டிற்கேற்ப சிறுசிறு மாறுதல்களுடன் காணப்பட்டாலும், பொதுப்படையான அமைப்பில் ஒரேவிதமாக இருக்கின்றன என்று ஓவிய நூல் புலவர்கள் கூறுகிறார்கள்.

மகேந்திரவர்மன் காலத்தில் இருந்ததும், மகேந்திர வர்மனால் உரை எழுதப்பட்டதுமான தக்ஷிணசித்திரம் எனும் நூல் இப்போது கிடைக்கவில்லை. சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் தமது உரையில் ஓவிய நூல் என்னும் சித்திரத்தைப் பற்றிய ஒரு நூலைக் குறிப்பிடுகிறார். அந் நூலும் இப்போது கிடைக்கவில்லை.

மகேந்திரவர்ம பல்லவன் காலத்துச் சித்திரங்கள் பெரும்பாலும் மறைந்துவிட்டன. நற்காலமாக இப்போது கிடைத்திருப்பவை, காலப்பழமையினால் வண்ணங்கள் மங்கிப்போய் அரைகுறையாக அழிந்துபட்ட நிலையில் சித்தன்ன வாசல் குகைக்கோயிலில் காணப்படுகிற ஓவியங்களே. சித்தன்ன வாசல் குகைக்கோயில், மகேந்திரவர்மன் காலத்தில் அமைக்கப்பட்ட சமணக்கோயில் ஆகும்.[1] அங்குக் காணப்படுகிற சுவர் ஓவியங்கள் முக்கியமாக நான்கு. அவற்றில் முதலாவது, அரசன் அரசி ஆகிய இருவரின் ியங்கள். இவை மார்பளவுவரையில் காணப்படுகின் கிரீடங்களுடன் காணப்படுகிற இந்த ஓவியத்தை, மேத்தா அவர்கள் "அர்த்தநாரீசுவரர்" உருவம் என்று கூறுவது தவறு.[2]

---

1. சித்தன்னவாசல் ஓவியம் மகேந்திரவர்மன் காலத்தது அல்ல என்பது திரு. K. R. ஸ்ரீநிவாசன் அவர்கள் கருத்து. (See Pp. 168—176. Proceedings of the Indian History Congress, Seventh Session, Madras.) ஆனால், இவர் அபிப்பிராயம் ஒப்புக்கொள்ளப்படவில்லை. இவை மகேந்திரவர்மன் காலத்து ஓவியங்களே என்பது பல ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

2. Studies in Indian Painting by Mehta.

இது அர்த்தநாரீசுவரர் உருவம் அன்று. சமணக் கோயிலிலே சிவபெருமானுடைய அர்த்தநாரீசுவரர் உருவம் எழுதப்படுவது வழக்கமன்று. அன்றியும் இது அர்த்தநாரீசுவரர் உருவமாகக் காணப்படவில்லை. இடப்புறம் பெண்ணாகவும் வலப்புறம் ஆணாகவும் அமைந்த ஒரே உருவந்தான்



சித்தன்னவாசல் ஓவியம்: மகேந்திரவர்மனும் இராணியும்

ீசுவரா உருவம ஆகும். ஆனால், இந்த ஓவியத்தில், ஆண் உருவமும் பெண் உருவமும் தனித்தனியே வெவ்வேறாக உள்ளன. இவை ஓர் அரசன் அரசியின் ஓவியங்களைக் றன. உண்மையில் இந்த ஓவியம் மகேந்திரவர்ம ும அவனுடைய பட்டத்தரசியையும் குறிக்கிறது என்பதில்

1. முகப்புப் படம் 12 பார்க்க.

இரண்டாவதாக உள்ளவை, இரண்டு தூண்களில் எழுதப்பட்டுள்ள இரண்டு அரம்பையரின் நடனக் காட்சி. இவை அரம்பையர் இருவர் அரங்கத்தில் நின்று நடனம் புரி-



சித்தன்னவாசல் ஓவியம்: நடன மங்கை

வதைக் காட்டுகின்றன. மகேந்திரவர்மனையும் அவன் மனைவியையும் ஓவிய உருவமாகத்தீட்டிய அதே ஓவியப் புலவனுடைய கைவன்மையையும் கலைத்திறத்தையும் இந்த ஓவியத்திலும் காணலாம். நாடகக் கலையில் தேர்ந்த

நங்கையர் இருவர், நமது கண்முன்பாக உயிருடன் நின்று நடனம் ஆடுவதுபோலக் காணப்படுகின்றனரே யல்லாமல் சுவரில் எழுதப்பட்ட சித்திரமாகத் தோன்றவில்லை.



சித்தன்னவாசல் ஓவியம்: நடன மங்கை

இந்த ஓவியங்கள் உயிர் உள்ளவையாகக் காணப்படுகின்றன! ஓவியப் புலவன் திறம்பட எழுதிய இந்த ஓவியங்களின் நடன நிலையைக் காணும்போது, காவியப் புலவராகிய திருத்தக்கதேவரின் சீவகசிந்தாமணிச் செய்யுள்கள் நம் நினைவுக்கு வருகின்றன. தேசிகப் பாவை என்பவள் சீவகனுக்கு முன்பாக அரங்கில் நின்று நடனம் ஆடிய காட்சியைக் கூறும் செய்யுட்களோடு இந்த ஓவியங்களின் நடனக் காட்சியை ஒத்திட்டு நோக்குக :

"குழலெடுத்து யாத்து மட்டார்
கோதையில் பொலிந்து மின்னும்
அழலவிழ் செம்பொற் பட்டம்
குண்டலம் ஆரம் தாங்கி

நிழலவிர் அல்குற் காசு சிலம்பொடு
சிலம்ப நீள் தோள்
அழகிகூத் தாடு கின்றாள்
அரங் அரம்பை யன்னாள்.

பட்டம
வார் குழை திருவில் வீசப்
பூண்முலை பிறழப் பொற்றோடு
இடவயின் நுடங்க ஒல்கி
மாணிழை வலக்கை தம்மால்
வட்டணை போக்கு கின்றாள்
காண்வரு

(பதுமையார் இலம்பகம்: 89, 92.)

இச் செய்யுள்களை த ஓவியங்கள் நினைவுறுத்துகின்றன.

. பப பூச்சூடிய இந்த நடனமங்கையர் அணிந்திருக்கும் நகைகளைப் பாருங்கள். இந்த நகைகளைப் பார்க்கும்போது பூம்புகார்ப் பட்டினத்து மாதவி அணிந்த நகைகளை இளங்கோவடிகள் கூறுவது நினைவுக்கு வருகிறது. பேர்போன நடனமங்கையாகிய மாதவி அணிந்திருந்த நகைகளைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. சிலம்பு, பாடகம், சதங்கை, காற்சரி என்பவற்றைக் காலுக்கு அணிந்து, முப்பத்திரண்டு முத்துமாலைகளினால் அமைக்கப்பட்ட விரிசிகை என்னும் மேகலையை அரையிலே நீலப்பட்டாடையின் மேல் அணிந்து, மாணிக்க வளையையும் பொற் கடகத்தையும் தோளுக்கு அணிந்து, சூடகம் நவரத்தினவளை பொன்வளை சங்கவளை பவழவளைகளை முன் கைக்கு அணிந்து, மகரவாய் மோதிரம் முதலிய மோதிரங்களை விரல்களுக்கு அணிந்து, வீரசங்கிலி நேர்ஞ்சங்கிலி சவடி சரப்பணி முத்தாரம் முதலியவற்றைக் கழுத்துக்கு அணிந்து, பத்திரகுண்டலம் குதம்பை முதலிய அணிகளைக் காதுக்கணிந்து, சீதேவி வலம்புரி பூரப்பாளை தென்பல்லி வடபல்லி என்னும் அணிகளை தலைக்கு அணிந்து மாதவி

என்னும் நாடக மடந்தை எழிலுடன் விளங்கினாள் என்று சிலப்பதிகாரம் (கடலாடுகாதை) கூறுவதுபோலவே, இந்தச் சித்தன்னவாசல் ஓவியத்தில் காணப்படும் நாடக மடந்தையரும் பலவித நகைகளையும் அணிகளையும் பூண்டு ியதோற்றத்தோடு காட்சி

அருகக்கடவுள் எழுந்தருளியுள்ள இந்தக் குை கோயிலிலே அரம்பையரின் நடனக்காட்சி ஓவியமாக எழுதப்பட்டிருப்பதின் காரணம் என்ன?

சமவசரணம் என்பது ஒன்றுக்குள் ஒன்றாக ஏழு மாடவீதிகளையுடையது. இந்தச் சமவசரணத்தின் நடுவிலே அமைந்துள்ள ஸ்ரீநிலயம் என்னும் கோயிலில் அருகக்கடவுள் எழுந்தருளியிருந்து திருவறம் போதிக்கிறார். ஏழு மாடவீதிகளையும் கடந்து ஸ்ரீநிலயத்துக்குச் செல்லும்போது, ஒவ்வொரு மாடவீதியிலும் நடன அரங்கங்கள் உள்ளன. அந்த அரங்கங்களில் அரம்பையர் அருகப்பெருமானின் சரிதையை நாட்டியமாக நடித்தும் பாடியும் நடனம் புரிகிறார்கள் என்று சமணசமய நூல்கள் கூறுகின்றன. ஆகவே, அருகக்கடவுள் எழுந்தருளியுள்ள )ந்தச் சமணக் குகைக்கோயிலில் அரம்பையர் நாட்டியம் ோபான்ற ஓவியங்கள் எழுதப்பட்டுள்ளன.

மூன்றாவதாகக் கண்ணையும கருத்தையும அழகான ஓவியம் தாமரைக்குளம் ஆகும். இத் தாமரைக் குள ஓவியம் இக் குகைக்கோயில் மண்டபத்தின் விதானத்தில் எழுதப்பட்டிருக்கிறது. கைவன்மை படைத்த ஓவியப்புலவனின் கலைநுட்பத்தைக் காட்டும் இந்த ஓவியம், வண்ணங்கள் மழுங்கி சிதைந்துள்ள நிலையிலும் தாமரைக்குளத்தின் அழகைக் காட்டுகிறது.

இக் குளத்தில் செந்தாமரை வெண்டாமரை அல்லி ஆம்பல் முதலிய நீர்ப்பூக்கள் பூத்து நிறைந்திருக்கின்றன. செழித்து வளர்ந்த தாமரையிலைகள் நீர் தெரியாதபடி குளத்தை மூடிக்கொண்டிருக்கின்றன. அன்னப்பறவைகளும் மீன்களும் இடையிடையே காணப்படுகின்றன.

எருமையும் யானையும் நீரில் நிற்கின்றன. ஆழமற்ற இந்தக் குளத்தில் முழங்கால் அளவுள்ள நீரில் மூன்று ஆட்கள் இறங்கித் தாமரைப்பூக்களை நாளத்தோடு கொய்து கற்றையாகக் கட்டித் தோளின்மேல் வைத்துக்கொண்டு வருகிறார்கள். [illegible]ய இயற்கைக்காட்சி இந்த ஓவியத்தில் நன்கு அமைந்திருக்கிறது. இந்தத் தாமரைக் குளத்தின் ஓவியம் எதைக் குறிக்கிறது?



சித்தன்னவாசல் குகைக்கோயிலில் உள்ள
தாமரைக்குளத்து ஓவியம்.

அருகக்கடவுள் எழுந்தருளியிருந்து அறவுரை [illegible]ளுகிற இடம் சமவசரணம் என்பது. சமவசரணத்தில் ஒன்றுக்குள் ஒன்றாக ஏழு மாடவீதிகள் உள்ளன. இந்த மாடவீதிகளில் இரண்டாவதாகவுள்ளது காதிகாபூமி எனப்படும். காதிகாபூமி, சமவசரணத்தைச் சூழ்ந்து அகழிபோன்ற நீர்நிலையாகும். இரண்டு குரோச சுற்றளவு உள்ளதாய் ஒன்றரைக்காத அகலமுடையதாய் இருக்கும்.

பார்ப்பதற்கு மிகுந்த ஆழமுள்ளதுபோல் தோன்றினாலும் இதில் இறங்கினால் முழங்கால் அளவுமட்டும் நீருள்ளதாயிருக்கும். மேடுபள்ள மில்லாமல் சமதரையாகவுள்ள இந்தக் காதிகாபூமி பலவித நீர்ப்பூக்கள் பூத்துப் பார்வைக்கு இந்திரவில்லைப்போன்று பலநிறமாகக் காணப்படும். அருகப்பெருமானை வணங்குவதற்காகச் செல்லும் அன்பர்கள் இதில் இறங்கிச் செல்லவேண்டும். செல்லும்போது அருகப்பெருமான் திருவடியில் இடுவதற்காகத் தாமரை அல்லி முதலிய பூக்களைப் பறித்துக்கொண்டு போவார்கள். இவ்வாறு சமவசரணத்தில் உள்ள காதிகாபூமி என்னும் அகழியைப் பற்றிச் சமணசமய நூல்கள் கூறுகின்றன. சித்தன்னவாசலில் உள்ள இந்தச் சமணக்கோயிலில், மண்டபத்தின் மேல் விதானத்தில் ஓவியமாக எழுதப்பட்ட இந்தத் தாமரைக்குளக் காட்சி காதிகாபூமியைக் குறித்து என்பதில் ஐயமில்லை.

குகைக்கோயிலின் பாறைச்சுவர்கள் கரடுமுரடாக இருக்கும். அச்சுவர் வண்ணஓவியம் எழுதுவதற்கு ஏற்றவை அல்ல. அச்சுவர்களில் ஓவியம் எழுதவேண்டுமானால், பாறைச்சுவரின்மேல் மெல்லிய சுதை பூசிய பின்னர் வண்ண ஓவியம் எழுதவேண்டும். சித்தன்னவாசல் பாறைச்சுவரிலும் மெல்லிய சுதை பூசப்பட்டு அதன்மேல் ஓவியம் எழுதப்பட்டுள்ளன. அஜந்தா, சிகிரியா முதலிய குகைகளிலுள்ள ஓவியங்களும் இவ்வாறு சுதை பூசப்பட்டு அதன்மேல் எழுதப்பட்டவைகளே.

மகேந்திரவர்மன் காலத்தில், அவனுடைய குகைக்கோயில்களில் எழுதப்பட்ட ஓவியங்கள் யாவும் மறைந்துவிட்டன. இந்தச் சித்தன்னவாசல் குகைக்கோயிலின் ஓவியங்கள் மட்டும், ஒளி மழுங்கிப்போய் அறைகுறையாகவேனும் காட்சியளிப்பது நமது நற்காலமாகும். காலத்தினால் மிக முற்பட்ட தமிழ்நாட்டு ஓவியம் இது ஒன்றுதான்; பிற யாவும் இதற்குப் பிற்பட்ட காலத்தன.

# அ. இசைக்கலை

மகேந்திரவர்மன் காலத்தில் இசைக்கலை மேன்மை பெற்றிருந்தது. நாடெங்கும் இசைப் பயிற்சியும் இசையார்வமும் காணப்பட்டன. இந்த அரசன் காலத்தில் இருந்த பக்தி இயக்கத்தை வளர்த்த திருநாவுக்கரசர் இசைப்பாடல்களைப் பாடியே பக்தி இயக்கத்தை நாடெங்கும் பரப்பினார். இவர் பாடிய தேவாரப் பாடல்கள் இசைப்பாடல்களே. இவர் காலத்தில் இசைக்கலை நாட்டில் பரவியிருந்தது என்பதை இவரது தேவாரப் பாடல்களில் காணப்படுகிற குறிப்புகளிலிருந்து அறியலாம். அக் குறிப்புகள் சிலவற்றை இங்கே [illegible]

"பண்பொருந்த இசைபாடும் பழனம். பஞ்சமம் பாடியாடும் தெள்ளியர். பண்ணினைப் பாடவைத்தார் பத்தர்கள் பயிலவைத்தார். பண்ணினாற் கின்னரங்கள் பத்தர்கள் பாடியாட இன்னிசை தொண்டர் பாட இருந்தார் ஆப்பாடியாரே. கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர் போலும், சீரொடு பாடலானார். பண்ணினார் முழலமோவாப் பைம்பொழிற் பழனைமேய அண்ணலார். பாட்டினார் முழவமோவாப் பைம்பொழிற் பழனைமேயார். கிளரும் பேரொலி கின்னரம் பாட்டறாக்களரி.

"அந்தளி ராகம். ஏழிசை வண்ணம். பண்ணார் பல்லியம் பாடி. ஏழ்நரம்பினோசை. ஏழ்நரம்பின் இசை. தொன்னரம்பின் இசை. பாட்டான் நல்ல தொடை. பண்ணிலங்கு பாடல். பண்பாடல். பாலையாழொடு செவ்வழிப் பண்கொள. யாழின் பாட்டு. பாவாய இன்னிசைகள் பாடி. பண்ணோடு யாழ்வீணை பயன். ஏழிசை யாழ் வீணை முரலக் கண்டேன்.

"குழலையாழ் மொழியார் இசை வேட்கையால், உழலையாக்கையை யூனு முணர்விலீர். கொண்டபாணி கொடுகொட்டி தாளங்கைக் கொண்ட தொண்டர். குடமுழவம்

வீணை தாளம். குழலோடு கொக்கரை தாளம் மொந்தை. பிடவம் மொந்தை குடமுழவங் கொடுகொட்டி குழலும் ஓங்க. கொக்கரையும் கொடுகொட்டியும். துடியாம் துடியின் முழக்கந்தானும். குழல் மொந்தை தாளம் வீணை கொக்கரை. அறை கலந்த குழல் மொந்தை வீணை யாழும். கொக்கரை சச்சரி வீணை. கொக்கரை குழல் வீணை கொடுகொட்டி. முரலுங் கின்னரம் மொந்தை முழங்கவே. தாளம் குழல் யாழ் குண்டிகை கொக்கரை. பரண்டை மொந்தை முழவு. கொடுகொட்டியும் கொக்கரை விரவினர் பண்கெழுமிய வீணையும். கொடுகொட்டி கொக்கரை தக்கை குழல் தாளம் வீணை மொந்தை. செந்துவர்வாய்க் கருங்கண்ணிணை வெண்ணகைத் தேமொழியார் வந்துவலஞ் செய்து மாநடமாட. பண்குணத்தார் பாடலோடு ஆட லோவாப் பரங்குன்றம்."

இவ்வாறு இசையைப்பற்றியும் இசைக்கருவிகளைப் பற்றியும் இன்னும் பல குறிப்புகள் திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகங்களிலே காணப்படுகின்றன.

புறநீர்மை காந்தாரம் பியந்தைக் காந்தாரம் கவுசிகம் இந்தளம் தக்கேசி சாதாரி நட்டபாடை நட்டராகம் பழம் பஞ்சுரம் காந்தார பஞ்சமம் பஞ்சமம் என்னும் பன்னிரண்டு பகற்பண்களும், தக்கராகம் பழந்தக்கராகம் சீகாமரம் கொல்லி கொல்லிக்சாவாணம் வியாழக்குறிஞ்சி மேகராகக் குறிஞ்சி அந்தாளிக் குறிஞ்சி குறிஞ்சி என்னும் ஒன்பது இராப்பண்களும், செவ்வழி செந்துருத்தி திருத் தாண்டகம் என்னும் மூன்று பொதுப்பண்களும் ஆக இரு பத்துநான்கு பண்கள் இவரது தேவாரப் பதிகங்களில் பயிலப்பட்டுள்ளன.

மகேந்திரவர்மன் மற்றக் கலைகளைப் பயின்றது போலவே இசைக்கலையையும் பயின்று அக்கலையில் சிறந்து இவன் இசைக்கலையில் வல்லவன் என்பதை வழங்கிய "சங்கீர்ணஜாதி" என்னும் சிறப்புப் பெயரினால் அறியலாம். திருச்சியிலும் பல்லாவரத்திலும்

இவன் அமைத்த குகைக்கோயில்களில் எழுதப்பட்டுள்ள சாசனங்களில் சங்கீர்ணஜாதி என்னும் இவனுடைய சிறப்புப் பெயர் காணப்படு...[1]

...யைச் சார்ந்த குளத்தூர் தாலுகாவில் உள்ள குடுமியாமலை என்னும் குன்றின்மேல் சிகாநாதேசுவரர் கோயில் இருக்கிறது. இது குகைக்கோயில். இக்கோயிலுக்குப் பின்புறத்தில் பாறையில் இரண்டு பிள்ளையார் உருவங்கள் செதுக்கியமைக்கப்பட்டுள்ளன. ஒன்று வலம்புரி விநாயகர்; மற்றொன்று இடம்புரி விநாயகர். இரண்டு விநாயகர்களுக்கு இடையிலே கற்பாறையில் குடுமியாமலை இசைக்கலைச் சாசனம் பொறிக்கப்பட்டிருக்கிறது. இது 1904-ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டது.[2] கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் பல்லவக் கிரந்த எழுத்தினால் எழுதப்பட்ட இந்தச் சாசனம் 13×14 அடி பரப்புள்ள

முப்பத்தெட்டு வரிகளையுடைய இந்தச் சாசனம், இராகத்துக்கு ஒரு பிரிவாக ஏழு இராகத்துக்கு ஏழு பிரிவுகளைக் கொண்டுள்ளது. இது, சித்தம் நமசிவாய என்று

1. இந்தப் பெயரைத் திரு. கோபிநாதராவ் அவர்கள் தவறுகப் பொருள் கொண்டார். மகேந்திரனுடைய தாயும் தந்தையும் வெவ்வேறு ஜாதியில் பிறந்தவர்கள் என்றும் அவர்கள் கலப்பு மணம் செய்துகொண்டு பிறந்தவன் மகேந்திரவர்மன் என்றும், ஆதலால்தான் அவனுக்குச் சங்கீர்ண ஜாதி என்னும் பெயர் உண்டாயிற்று என்றும் தவறாக எழுதினார்.

—Epi. Ind. Vol. XVII. P. 16.

திரு. கிருஷ்ண சாஸ்திரி அவர்கள் இதனை மறுத்து, சங்கீர்ண ஜாதி என்பது தாளவகையின் ஒரு பெயர் என்று கூறினார். சங்கீர்ண ஜாதி என்பதற்குக் கலப்பு ஜாதி என்னும் பொருள் இவ்விடத்தில் பொருந்தாது. பரதர் இயற்றிய நாட்டிய சாஸ்திரம் இசையை ஜாதி என்னும் பெயரால் கூறுகிறது. ஆகையால், சங்கீர்ண ஜாதி என்னும் பெயர் இசை சம்பந்தமான பெயர் என்பது ஐயமறத் தெரிகிறது. எனவே, மகேந்திரவர்மன், சங்கீர்ண ஜாதி என்னும் பெயர் பெற்றிருந்தது அவன் இசைக் கலையில் தேர்ந்தவன் என்பதைத் தெரிவிக்கிறது.

2. Epi. Rep. 1905. Page 47, Para 4.

தொடங்கி இசையைப்பற்றிய செய்திகளைக் கூறிய பின்னர், முடிவிலே,

> ஸ்ரீருத்ராசார்ய ஶிஷ்யேண பரம
> மாஹேஸ்வரேண ராஜ்ஞா ஶிஷ்ய
> ஹிதார்த்த க்வதா : ஸ்வராகமா

என்று முடிகிறது; அஃதாவது, ருத்ராசார்யருடைய சீடரான ஓர் அரசனால் இந்த இசைக்கலைச் சாசனம் இயற்றப் பட்டது என்று கூ.

குடுமியாமலை இசைக்கலைச் சாசனத்தின்

> “எட்டிற்கும் ஏழிற்கும்
> இவை உரிய.”

என்று பல்லவத் ல் இந்தச் ன
ில் எழுதப்பட்

இச் சாசனத்தை எழுதியவன் முதல் மகேந்திரவர்மன் என்று சரித்திர ஆராய்ச்சிவல்லார் முடிவுசெய்துள்ளார் கள். பல்லவக்கிரந்த எழுத்தினால் எழுதப்பட்டுள்ள இந்தச் சாசனம் நாகரி எழுத்தில் அச்சிடப் பட்டிருக்கிறது.[1] சங்கீத

1. Epi. Ind. Vol. XII, P. 226 - 237.

ரத்நாகரம் என்னும் நூலை இயற்றிய சாரங்கதேவர் காலத்துக்கு ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்னே இந்தச் சாசனம் எழுதப்பட்டது. சாரங்கதேவர் 13-ஆம் நூற்றாண்டில் இருந்தவர். சங்கீதரத்நாகரத்துக்கு முன்னே நாரதசிக்ஷை என்னும் ஓர் இசைநூல் இருந்தது. அந்த நூலைச் சங்கீத ரத்நாகரத்தில் மேற்கோள் காட்டியிருக்கிறார் சாரங்கதேவர். ஆனால், நாரதசிக்ஷை எப்போது இயற்றப்பட்டதென்று தெரியவில்லை. சாரங்கதேவர் தமது சங்கீத ரத்நாகரத்தில் மேற்கோள் காட்டுகிற நாரதசிக்ஷை ஏழு ராகங்களை மட்டும் கூறுகிறது. ஆகவே, நாரதசிக்ஷை கூறுகிற இசையும், குடுமியாமலைச் சாசனம் கூறுகிற இசையும் ஒற்றுமையுள்ளவை என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். சங்கீத ரத்நாகரமோ பல இராகங்களைக் கூறுகிறது. நாரதசிக்ஷை என்னும் நூல், நாரத முனிவர் இயற்றிய ஒரு இசைநூலைப் பின்பற்றி எழுதப்பட்டது என்று கருதப் [illegible]

நாரத சிக்ஷையும் அதனுடன் [illegible] குடுமியாமலை இசைக்கலைச் சாசனமும் தமிழ்இசை மரபைச் சேர்ந்தவை என்று தெரிகின்றன. என்னை? வடநாட்டு இசை மரபு ஹனுமந்தரைப் பின்பற்றியது என்றும், தென்னாட்டு இசைமரபு நாரதரைப் பின்பற்றியது என்றும் கர்ண பரம்பரையாகச் சொல்லப்படுகிறது. அன்றியும் நாரதமுனிவர் தமிழ் இசைநூல் செய்தவர் என்பது தமிழ் [illegible]

“நாரத வீணை நயந்தெரி பாடல்

என்று, சிலப்பதிகாரம் 6-வது காதை கூறுகிறது. “யாழாசிரியனாகிய நாரத முனிவனின் யாழின் ஏழிசை இன்பம்” என்று இதற்கு அடியார்க்கு நல்லார் உரை எழுதுகிறார்.

குடுமியாமலைச் சாசனமும் வீணையைப்பற்றிய இசையைத்தான் கூறுகிறது என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

நாரதமுனிவர் பஞ்சபாரதீயம் என்னும் இசைத்தமிழ் நூலைச் செய்தார் என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் கூறுகிறார்: “இசைத் தமிழ்

நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலா வுள்ள தொன்னூல் தண" என்று அவர் எழுதுவது காண்க.

மேலும் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை ஒன்றன் பகுதி "கதிர் திகிரியான் மறைத்த" என்னும் செய்யுளின் ஈற்றடி, "முதுமறை தேர் நாரதனார் முந்தைமுறை நரம் புளர்வார்" என்று நாரதரின் யாழிசையைக் கூறுகிறது. இதற்கு, "முதிய வேதத்தின் சிக்கை என்னு மங்கத்தை ஆராயும் முதனரம்பை உருவி வாசிக்கும் நாரதனு ரென்க. சிக்கை என்பது இசை" என்று அடியார்க்கு நல்லார் உரை ரழுதுகிறார். நில் நாரதசிக்ஷை என்னும் நூலை இவர் குறிப்பிடுவது காண்க.

ஷை ஆய்ச்சியர் குரவை ஒன்றன்பகுதி இரண்டாவது பாடலாகிய "மயிலெருத் துறழ்மேனி" என்னும் செய்யு ளின் கடைசி அடி "குயிலுவருள் நாரதனார் கொளைபுரணர் சீர் நரம்புளர்வார்" என்று கூறுகிறது. "குயிலுவ ருட் செறிப்புப் புணர்ந்திருக்கும் தாள வறுதியையுடைய நரம்பை உருவிவாசிக்கும் நாரதனு ரென்க" என்று உரை யாசிரியர் எழுதுகிறார்.

திருஞானசம்பந்தர் அருளிய "திருவெழுகூற்றிருக் கை"யில், நாரதமுனிவரை ஏழிசையோன் என்று கூறு கிறார். "எச்சன் ஏழிசையோன் கொச்சையை மேச்சினை" என்பது அவர் வாக்கு. இதில், எச்சன் என்பது இந்திரன், ஏழிசையோன் என்பது நாரதன். இதனாலும், தமிழ்நாட் டிலே நாரத முனிவர் வழியாக இசைக்கலை பயின்று வரு கிறது என்பது தெரிகிறது. இசைத்தமிழ் வல்லவரான ஞானசம்பந்தரே இதைக் கூறுவது கருதத்தக்கது.

இதனால் நாரதரைப் பின்பற்றித் தமிழிசை மரபு வரு கிறது என்பது தெரிகிறது. மகேந்திரவர்மனுடைய குடு மியாமலை இசைச் சாசனமும் இந்த மரபையே பின்பற்றி யுள்ளது என்று ஆராய்ந்து பார்த்த அறிஞர்கள் கூறுகிறார் கள்.

யாழ்நூல் என்னும் இசைத்தமிழ் நூலினை இயற்றிய ஸ்ரீமத் விபுலாநந்த அடிகள் தமது நூலில் இதையே கூறுகிறார். "சார்ங்கதேவர் சொல்லுகிற சுத்தவுருவம், காகலியோடு கூடிய வுருவம், அந்தரத்தோடு கூடியவுருவம், காகலி அந்தரத்தோடு கூடிய வுருவம் எனும் நான்கினுள் காகலியோடு கூடியவுருவம் (குடுமியாமலை) கல்வெட்டிற் கொள்ளப்பட்டிலதாதலின், கல்வெட்டினைப் பொறித்த ஆசிரியர் முற்றிலும் பழந்தமிழ் மரபினைக் கைக்கொள்கின்றார் என்பது தெளிவாகிறது" என்று அவர் எழுதுவது காண்க.

குடுமியாமலை இசைக்கலைக் கல்வெட்டைப்பற்றி விபுலாநந்த அடிகள் மேலும் எழுதுவது ஈண்டுக் கருதத்தக்கது. அவர் எழுதுவது வருமாறு:

"எட்டிற்கும் ஏழிற்கும் இவையுரிய எனக் கல் வெட்டின் ஈற்றிலே காணப்படுகின்ற குறிப்பினை நோக்குமிடத்துச், சுத்த மூர்ச்சனையாகவும், அந்தரங் கூடிய மூர்ச்சனையாகவும், காகலியந்தரங்கூடிய மூர்ச்சனையாகவும் அனைத்தினையும் இசைக்கலாம் என்னும் கருத்துப் பெறப்படுகின்றது. கரஹரப்பிரியா மேளத்திற்குள்ள சுத்த நரம்புகள் ஏழினையும் பெற்ற மூர்ச்சனை 'ஏழு' எனக் குறிக்கப்பட்டது. அந்தரம் கூடியது 'எட்டு' எனவும், காகலி யந்தரம் கூடியது 'ஒன்பது' எனவும் குறிக்கப்பட்டன வென்றெண்ண வேண்டியிருக்கிறது. மூன்றுருவங்களினும் தனித்தனி ஏழு பாலைகளையும் பிறப்பிக்கலாம் இப்பொருளைத் தேவார வியல், 5-ஆம் பிரிவினுள்ளே தெளிவுபடுத்தினும்."[2]

"'தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ்' என ஆசிரிய மாலையினுட் குறிக்கப்பட்ட ஒன்பது நரம்பினையுடைய இசைக்கருவி, குடுமியாமலைக் கல்வெட்டு பொறிக்கப்பட்ட காலத்திலே வழக்கிலிருந்த தென்பதற்கு அக்

1. யாழ்நூல்: ஒழிபியல், குடுமியாமலைக் கல்வெட்டு, பக்கம், 338.

2. யாழ்நூல்: ஒழிபியல், பக்கம், 351.

கல்வெட்டே சான்று பகருகின்றது. இக்கருவியிலே அந்தர காந்தாரமும், காகலி நிஷாதமும் அந்தரங்களாக நின்றன வென்பதும் கல்வெட்டினால் அறியப்படுகின்றது."[1]

குடுமியாமலைக்கு அருகிலே திருமய்யம் என்னும் ஊரிலுள்ள மலையக்கோயிலின் அருகில், பல்லவர் காலத்து எழுத்தினால் எழுதப்பட்ட இசைக்கலைச் சாசனம் ஒன்று இருந்தது. பிற்காலத்துப் பாண்டியன் ஒருவன், இந்தச் சாசனத்தை அழித்துப்போட்டு அந்த இடத்தில் தன் சாசனம் ஒன்றை எழுதிவிட்டான். ஆனாலும், அழிக்கப் படாத சில எழுத்துக்கள் இன்றும் காணப்படுகின்றன. அவை,

பரிவாதினிதா
கற்கப்படுவது காண்.

ஞ்சொல்லிய புகிற் பருக்கும்நிமி
மூக்கந் நிருவத்துக்கும் உரித்து

குணசேனப் பிரமாணஞ்
செய்த வித்யா பரிவாதினி கற்.

என்பன. துண்டுதுண்டாக எஞ்சியுள்ள இந்தச் சொற்களி லிருந்து இதன் பொருளைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இந்தச் சாசனம் அழிக்கப்பட்டுப் போனபடியினாலே அக் காலத்து இசைக்கலையைப்பற்றிய செய்தியை அறிய முடி யாமலிருக்கிறது. இந்தச் சாசனத்தை அமைத்தவன் மகேந்திரவர்மனே என்று கருதுகின்றனர்.

---

1. தேவாரவியல், பக்கம், 268.

# ௯. மத்தவிலாசம்

கலைச்செல்வனாகிய மகேந்திரவர்மன் நாடகக் கலையிலும் வல்லவனாக இருந்தான். மத்தவிலாசப் பிரஹஸனம் என்னும் நாடக நூலை இவன் இயற்றியிருப்பதிலிருந்து இதனை யறியலாம். பிரஹஸனம் என்பது நகைச்சுவை நாடகம் என்று பொருள்படும். எனவே, மத்தவிலாசப் பிரஹஸனம் என்பது பைத்தியக்காரனின் நகைச்சுவை நாடகம் என்று பொருள்படுகிறது. உண்மையிலே ஒரு பைத்தியக்காரன் இந்த நாடகத்தில் இடம் பெறுகிறான். இந்த நாடகம் வடமொழியும் பிராகிருதமொழியும் கலந்து இயற்றப்பட்டது. மகேந்திரவர்மன் இந்த நாடகத்தை எழுதியபடியினாலே இவனுக்கு மத்தவிலாசன் என்னும் சிறப்புப்பெயர் ஏற்பட்டதுபோலும்.[1]

மகேந்திரவர்மன் அமைத்த குகைக்கோயில்களிலே இவனுடைய சிறப்புப் பெயர்கள் பொறிக்கப்பட்டிருப்பதை முன்னரே அறிந்தோம். அக் குகைக்கோயில்களில் பல்லாவரத்துக் குகைக்கோயிலிலும் திருச்சிராப்பள்ளிக் குகைக் கோயிலிலும் மத்தவிலாச என்னும் பெயர் காணப்படுகிறது. இவன் அமைத்த மாமண்டூர்க் குகைக்கோயிலில் உள்ள இவன் காலத்துச் சாசனத்தில் மத்தவிலாஸாதிபதம் ப்ரஹஸ(ந) என்று எழுதப்பட்டிருக்கிறது. இதனால் இவன் மத்தவிலாசப் பிரஹஸனம் என்னும் நூலை இயற்றினான் என்பது உறுதியாகிறது.

---

1. மகேந்திரவர்மன் பகவதஜ்ஜுகம் என்னும் வடமொழிப் பிரகசன நூலையும் இயற்றினான் என்று சிலர் கருதுகின்றனர். பகவதஜ்ஜுகத்தை மகேந்திரவர்மன் எழுதினான் என்பதற்குச் சான்று இல்லை. அந்நூலை யார் இயற்றினார் என்பதே தெரியவில்லை. மகேந்திரவர்மன் அந்நூலை இயற்றியிருந்தால், பகவதஜ்ஜுகன் என்னும் சிறப்புப்பெயர் அவனுக்கு வழங்கியிருக்கும்; மத்தவிலாசம் இயற்றியபடியால் மத்தவிலாசன் என்னும் பெயர் பெற்றதுபோல. ஆகவே, பகவதஜ்ஜுகம் மகேந்திரவர்மனால் இயற்றப்பட்டதல்ல என்று தெரிகிறது.

மத்தவிலாசப் பிரஹஸனம் என்னும் நூல் இப்போது நமக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால், இடைக்காலத்திலே இந்த நூல் தமிழ்நாட்டிலே மறைந்திருந்து மலையாள நாட்டிலே அஞ்ஞாதவாசம் செய்திருந்தது. வெகுகாலம் சென்றபிறகு இந்நூல் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டு 1917-இல் "திருவனந்தபுரம் சமஸ்கிருத வெளியீடு" வரிசையில் ஒன்றாக அச்சிடப்பட்டது.

𑌮𑌤𑍍𑌤𑌵𑌿𑌲𑌾𑌸

𑌮𑌤𑍍𑌤𑌵𑌿𑌲𑌾𑌸𑌾𑌧𑌿𑌪𑌦𑌪𑍍𑌰𑌹𑌸

1. மத்தவிலாஸ 2. மத்தவிலாஸாதிபத ப்ரஹஸ(ந)

தமிழ்நாட்டிலே மகேந்திரவர்மனால் எழுதப்பட்ட இந்த நாடகநூல், பிறந்த நாட்டிலே மறைந்து மலையாள நாட்டிலே போற்றப்பட்டிருந்த காரணம் என்ன?

இடைக்காலத்திலே மலையாளநாட்டு அரசன் ஒருவன் தொண்டமண்டலத்தைக் கைப்பற்றி, காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்டான். மலையாள மன்னன் காஞ்சிபுரத்தில் இருந்து அரசாண்டதற்கு அறிகுறியாக இன்னும் காஞ்சிபுரத்தில் மலையாளத்தெரு என்று ஒரு தெரு இருக்கிறது. அன்றியும் காஞ்சிபுரத்து வரதராசப்பெருமாள் கோயிலில் மலையாள நாச்சியாருக்கு ஒரு சிறு கோயிலும் உண்டு. மலையாள மன்னன் காஞ்சிபுரத்தில் இருந்தபோது அவன் பரிவாரங்களில் சாக்கியார்களும் இருந்திருக்க வேண்டும். சாக்கியார் என்பவர் பாட்டுப்பாடி கூத்தாடுகிற ஒரு வகுப்பார். கூத்தாடுவதையே தமது தொழிலாகவுடைய இவர்கள் இன்றும்

மலையாள நாட்டில் உள்ளனர். சிலப்பதிகாரத்திலே[1] சேரன் செங்குட்டுவன் அவையிலே பறையூர் கூத்தச்சாக்கையன் என்பவன் கொட்டிச் சேதம் (கொடுகொட்டி) என்னும் கூத்தை ஆடினான் என்று படிக்கிறோம். ஆகவே, கூத்தாடும் சாக்கையர் (சாக்கியர்) இரண்டாயிரம் ஆண்டுகளாகச் சேரநாட்டில் இருந்துவருகிறார்கள் என்பது தெரிகிறது. காஞ்சிபுரத்திலே அரசாண்ட மலையாள அரசனுடைய சபையிலே இருந்த சாக்கியர்கள், முற்காலத்திலே காஞ்சிபுரத்திலே மகேந்திரவர்மன் இயற்றிய மத்தவிலாசப் பிரஹஸனத்தைப் படித்து, அதன் பெருமையையறிந்து அதனைப் போற்றிவைத்தனர் போலும். காஞ்சிபுரத்தில் மலையாள அரசன் நெடுங்காலம் அரசாளவில்லை. மலையாள அரசன் ஆட்சி முடிவடைந்த பிறகு சாக்கியர்கள் தமது சொந்த மலையாள நாட்டிற்குச் சென்றபோது இந்நூலையும் தங்களுடன் கொண்டுபோய்ப் போற்றிவைத்திருக்கவேண்டும். தமிழ்நாட்டில் எக்காரணத்தாலோ இந்நூல் மறைந்துவிட்டது. இவ்வாறு நெடுங்காலமாக இடைக்காலத்தில் மறைந்துகிடந்த மத்தவிலாசம் மேலே கூறியபடி மலையாள தேசத்தில் கண்டுபிடிக்கப்பட்டு 1917-இல் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.[2]

மகேந்திர விக்ரமவர்மன் இயற்றிய மத்தவிலாசப் பிரஹஸனத்தை பார்னெட் என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்.[3]

---

1. சிலம்பு: நடுகற்காதை, 67-77.

2. 'மத்தவிலாசம் கூத்து' என்னும் ஒரு நூல் மலையாள மொழியில் உண்டு என்று திரு. ஆர். நாராயணப் பணிக்கர் அவர்கள் தாம் எழுதிய கேரளபாஷா ஸாஹித்ய சரித்திரம் II என்னும் நூலில் எழுதியிருக்கிறார். கூத்தாடுவதையே தொழிலாகவுடைய சாக்கியர்களின் உபயோகத்திற்காக இந்நூல் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. இந்நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை. பெயர் ஒற்றுமையைக்கொண்டு இந்நூல், மகேந்திரவர்மன் இயற்றிய மத்தவிலாசப் பிரஹஸனத்தின் வழிநூலாக இருக்குமோ என்று ஐயம் உண்டாகிறது.

3. Bulletin of the Oriental Studies, London Institution Vol. V.

மகேந்திரவர்மன் வரலாற்றையும் அவன் அமைத்த சிற்பங்களையும் ஆராய்கிற நாம் அவனுடைய மத்தவிலாச நாடகத்தையும் படிக்கவேண்டுவது கடமையாகும். ஆகவே, அதனை இங்குத் தமிழில் மொழிபெயர்த்துத் தருகிறோம். இதனைத் தமிழில் மொழிபெயர்க்கும்போது எனக்குப் பெரிதும் உதவிசெய்தவர் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரிப் பேராசிரியராகவும் தத்துவநூல் பேராசிரியராகவும் இருந்து இப்போது ஓய்வுபெற்றுள்ள இராவ்பகதூர் எ. சக்கரவர்த்தி நயினார் எம். ஏ, அவர்கள். இப்பெரியாருக்கு நன்றி கூறுகிறேன்.

இந்த நகைச்சுவை நாடக நூலிலே, மகேந்திரவர்மன் காலத்தில் காஞ்சிபுரத்தில் இருந்த காபாலிகம், பாசுபதம், பௌத்தம், சமணம் என்னும் மதங்களைப்பற்றிய செய்தியை அறியலாம். மேலும், இந்நூலின் இடையிடையே மகேந்திரவர்மனுடைய சிறப்புப் பெயர்களான அவனிபாஜனன், மத்தவிலாசன், குணபரன், சத்துருமல்லன் முதலிய பெயர்களையும் காணலாம்.

## மத்தவிலாச நாடகம்

[நாந்தி பாடியவுடன் சூத்திரதாரர் அரங்கத்திற்கு வருகிறார்]

சூத்திரதாரர்: பேச்சு, ஆடல், உடை, உருவம், குணம், மெய்ப்பாடு இவைகளைத் தன்னிடத்தே கொண்டுள்ள, திப்பியமாகிய காபாலியின் தாண்டவம், மூவுலகத்திலும் போற்றப்படுகின்றது. இத் தாண்டவத்தைக் காண்பவனும் அக் காபாலியே. அவனுடைய அளவு கடந்த அகண்ட அருளானது இந்த உலகமாகிய பாத்திரத்தில்[1] பரந்து நிறைவதாக.

---

1. உலகமாகிய பாத்திரத்தில் நிறையக்கடவது என்னும் பொருள் உள்ள வியாப்தாவனி பாஜனம் என்று மூல நூலில் கூறப்பட்டுள்ளது. இதில், இந்நாடக நூலாசிரியராகிய மகேந்திர விக்கிரமவர்மருடைய சிறப்புப் பெயர்களில் ஒன்றான அவனிபாஜனன் என்பது ஒலிக்கும்படி இச்சொல் அமைக்கப்பட்டுள்ளது.

புதிய நாடகத்தை நடிக்கும்படிச் சபையோர் எங்களை நியமித்திருக்கிறார்கள். இளையாள்மீது கோபங் கொண்டிருக்கிற என்னுடைய மூத்த மனைவியின் கோபத்தைத் தணிப்பதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பு. அவளிடம் போகிறேன். (அணியறையை நோக்கி) ஆரியே! இங்கு வருக. [நடிகை வருகிறாள்.]

நடிகை : (சினத்துடன்) ஐயா! யௌவன குணபர மத்த விலாசப் பிரஹஸனத்தை[1] என்னிடம் விளையாட வந்து விட்டீரோ?

சூத்திர : ஆமாம். அதுதான்.

நடிகை : அப்படியானால், அதை, தாங்கள் யாரிடம் ஆசை கொண்டு இருக்கிறீர்களோ அவளிடம் போய் விளையாடுங்கள்.

சூத்திர : உன்னோடு ஆடும்படித்தான் எனக்குக் கட்டளை.

நடிகை : அப்படி அவள் உமக்குக் கட்டளையிட்டாளோ?

ர : ஆமாம். இந்த ஆட்டத்தில் நீ நடித்தால் சபையோரின் நன்மதிப்பைப் பெறுவாய்.

நடிகை : நன்மதிப்பைப் பெறத்தகுந்தவர் தாங்கள்தான்.

சூத்திர : அது எனக்குத் தகுந்ததுதான். எப்படி என்றால், சபையோர் உன்னுடைய நடிப்பைக் கண்டு மகிழ்ந்து அந்த நன்மதிப்பை எனக்கு அளிப்பார்கள்.

நடிகை : (மகிழ்ச்சியுடன்) அப்படியானால், சபையோரின் அபிமானத்தைப் பெற்றிருக்கிறேன்!

சூத்திர : ஆம். மெய்யாகவே.

---

1. இதில், இந்நாடக நூலாசிரியரான மகேந்திரவிக்ரமவர்மருடைய சிறப்புப் பெயர்களான **மத்தவிலாசன், குணபரன்** என்னும் பெயர்கள் அமைந்துள்ளன. யௌவன குணபர மத்த விலாசப் பிரஹஸனம் என்பதற்குக் காளைப் பருவத்திற்கு இயல்பாக உள்ள களியாட்டம் பொருந்திய நகைச்சுவை நாடகம் என்பது பொருள்.

நடிகை : இந்த நல்ல செய்தியைச் சொன்ன தங்களுக்கு என்ன வெகுமதி தருவேன்!

சூத்திர : வெகுமதியைப் பற்றிப்பேசி வீணாகக் காலங் கழிக்க வேண்டாம். இதோ உன்னுடைய இனிய முகத்தைக் காண்கிறேன். மகிழ்ச்சியைக் காட்டுகிற உன்னுடைய கண்களையும், புன்முறுவல் அரும்பும் உன்னுடைய வாயிதழ்களையும் காண்கிறேன். இதை விட வேறு வெகுமதி எனக்கு என்ன வேண்டும்?

நடிகை : இப்போது என்ன ஆட்டம் ஆடப்போகிறீர், ஐயா!

சூத்திர : ஏன், நீதான் முன்னமே சொன்னாயே; மத்த விலாசப் பிரஹஸனம் என்று.

நடிகை : நான் கோபமாகப் பேசியது உண்மையாய் விட்டது! இந் நாடகத்தை இயற்றிய ஆசிரியர் யாரோ?

சூத்திர : சொல்லுகிறேன் கேள். பல்லவகுலமாகிய உலகத்திற்கு மேருமலை போன்றவரும், எல்லா நாட்டரசர்களையும் வென்று புகழ்கொண்டவரும், ஆகண்டலனை (இந்திரனை)ப் போன்ற ஆற்றலையுடையவரும், தமது செல்வப் பெருமைக்கேற்ப கொடைப் பெருமையினால் மகாராஜனையும் (குபேரன்) சிறியவனாகச் செய்தவரும் ஆகிய ஸ்ரீநரசிம்மவிஷ்ணு வர்மருடைய திருக்குமாரர் ஆவர் இந்நூலாசிரியர். இவ்வாசிரியர் குணங்களைக் கூறுகிறேன் கேள். ஆறு பகையை வென்றவர்; பிறருக்கு நன்மை செய்கிற அருள் குணத்தினால் ஐம்பெரும் பூதங்களுக்குச் சமானம் ஆனவர். இவருடைய பெயர் ஸ்ரீமகேந்திர விக்கிரமவர்மர் என்பது.

அன்றியும், கற்பாந்த காலத்தின் இறுதியில் உலகம் முதலிய எல்லாப் பொருள்களும் ஆதி புருஷனிடம் ஒடுங்குவது போல, அறிவு, ஈகை, அருள், உயர்வு, ஒளி, கலைவன்மை, வினயம் முதலிய நற்குணங்கள் எல்லாம், இக் கலிகாலத்திலே புகலிடம் கிடைக்

காமல் அலைந்துதேடி, கடைசியாக இவரே தமக்குரிய புகலிடம் எனக் கண்டு, இவரிடம் குடிபுகுந்தன.

மேலும், உயர்தரமாகிய நகைச்சுவையை உண்டாக்கும் சொற்களாகிய உயர்ந்த இரத்தினங்களும், சிறந்த கவிதைகளும் இவரிடத்திலிருந்து உண்டா

நடிகை : இந்தப் புதிய நாடகத்தை உடனே நடிக்க வேண்டும். இனியும் தாமதம் ஏன் ?

திர : இசைப் பாட்டுக்கள்தான் என்னுடைய செல்வமும் வாழ்வும். ஆனால், இப்போது இக் கவிஞரின்
என் மனம் அடங்கு

(அணியறையிலிருந்து ஒரு குரல்) : அன்பே, தேவசோமா !

திர : கபால பாத்திரத்தைத் தனது பெரும் புகழாக உடைய அந்தக் காபாலிகன், குடித்து வெறித்துக் களியாட்டம் தெளிந்து அதோ, குமரி ஒருத்தியுடன் வருகிறான். [போகிறார்கள்.]

---

**சத்தியசோமன்**—சைவசமயத்தைச் சேர்ந்த ஒரு காபாலிகன்.
**தேவசோமை**—சத்திய சோமனுடைய மனைவி
**நாகசேனன்**—ஒரு பௌத்த பிக்கு
**பப்ருகல்பன்**—சைவசமயத்தைச் சேர்ந்த ஒரு பாசுபதன்.
**பைத்தியக்காரன்.**
**இடம்** : காஞ்சிமா நகரம்.

---

[காபாலிகன் சத்திய சோமன், தன் மனைவி தேவ சோமையுடன் குடித்து மயங்கி வருகிறான்.]

கபாலி : கண்ணே தேவசோமா ! தபசு செய்வதால் நினைத்த உருவத்தை அமைத்துக் கொள்ளலாம் என்பது உண்மைதான். நீ கொண்டுள்ள பரமவிரதத்தின்[1]

1. பரம விரதம் என்பது இங்கே காபாலிக விரதத்தைக்

பலனாக உன் உருவத்தையே மாற்றிக்கொண்டு கட்டழகியாய்க் காணப்படுகிறாய்!

...ில சிறு வியாவைத துளிகள் அரும்ப, புருவங்கள் வில்லைப்போல் வளைந்து நெகிழ, காரண மின்றிச் சிரிப்பதும், வார்த்தைகள் குழறுவதும், கண்கள் சிவந்திருப்பதும், கருவிழிகள் சுழல்வதும், கூந்தல் அவிழ்ந்திருப்பதும், கழுத்திலுள்ள மாலைகள் நெகிழ்வதும் கண்கொள்ளாக் காட்சியாக ... க்

தேவசோமை: நான் குடித்திருக்கிறதாகவா சொல்லுகிறீர்?

காபாலி: அன்பே, என்ன சொன்னாய்?

தேவ: நான் ஒன்றும் சொல்லவில்லையே!

காபாலி: அப்படியானால், நான் குடித்திருக்கிறேனா?

தேவ: ஐயா, தரை சுற்றுகிறது; பூமி சுழல்கிறது. நான் விழுந்து விடுவேன்போல் இருக்கிறது. என்னைப் பிடித்துக் கொள்ளும்.

காபாலி: இதோ பிடித்துக் கொள்கிறேன், அன்பே! (அவளைப் பிடிக்கப்போய்க் குடி மயக்கத்தினால் கீழே விழுகிறான்) [1]சோமதேவீ! என் கண்ணே! என்மேல் உனக்குக் கோபமா? உன்னைப் பிடிக்க வரும்போது ஏன் விலகிப் போகிறாய்.

தேவ: ஆமாம். சோமதேவிக்கு உன்மேல் கோபந்தான். அவள் முன்பு தலைவணங்கி சாந்தப்படுத்த முயன்றாலும் அவள் உன்னைவிட்டு விலகிப்போகிறாள்!

காபாலி: மெய்தான். நீ சோமதேவிதான். (யோசித்து) ...சோமை.

1. குடி மயக்கத்தால், தேவசோமை என்பதற்குப் பதிலாக, சோமதேவி என்று வேறொருத்தி பெயரைக் கூறுகிறான். அதனால், தேவசோமை கோபிக்கிறாள்.

தேவ: சோமதேவிமேல் உமக்கு ஆசை அதிகம், ஐயா அதனுல்தான் என்னிடம் பேசும்போதும் அவள் பெயரைச் சொல்லி அழைக்கிறீர்..

காபாலி: என்னுடைய குடிமயக்கத்திஞல், கண்ணே! வார்த்தை தவறி வந்துவிட்டது, கோபப்படாதே.

தேவ: நல்லவேளை. நீர் அறிந்து, வேண்டுமென்றே சொல்ல வில்லை.

காபாலி: குடிப்பழக்கம், என்னையறியாமல் ஏதேதோ உளறும்படிச் செய்கிறது! நல்லது. இன்று முதல் குடிப்பதைவிட்டு விடுகிறேன்.

தேவ: ஐயாவே! என்பொருட்டு உம்முடைய பரமவிரதத்தைத் தவறவிடவேண்டாம்.

காபாலி: (மகிழ்ச்சிபொங்க அவளைத் தூக்கி நிறுத்தித் தழுவிக் கொள்கிருன்.) த்ருண, த்ருண! நமசிவாய! அன்பே, விசித்திரமான காபாலிக வேடம் பூண்டு, மனதார மதுவை அருந்தி, கருவிழி மங்கையர் முகத்தைக் கண்டுகொண்டிருந்தால் அதுவே மோக்ஷத்திற்குச் செல்லும் நல்வழியாகும் என்று திருவாய் மலர்ந்தருளிய சூலம் ஏந்திய எம்பெருமான் நீடூழி வாழ்க!

தேவ: நீர் இப்படி எல்லாம் பேசக்கூடாது. ஆருகதர் (ஜைனர்) மோக்ஷத்திற்கு வேறுவழி காட்டுகிருர்கள்.

காபாலி: ஆமாம், அன்பே! அவர்கள் யார் தெரியுமா? காரணத்தைப் பொறுத்தது காரியம் என்று கூறுகிறவர்கள்; இன்பம், துன்பத்தின் காரியம் என்று கூறுகிறவர்கள். ஆகையால், அவர்கள் நிந்திக்கத் தக்கவர்கள்.

தேவ: பாபம் சாந்தியாகட்டும்!

காபாலி: சாந்தி! சாந்தி! ஐம்புலன்களை அடக்கி, பிரமசரிய விரதம் காத்துத் தலைமயிரைப் பிடுங்கி எடுத்து, அழுக்

கடைந்த உடம்பில் அழுக்குக் கந்தைகளை உடுத்து, உண்பதற்குத் தனியாக ஒரு நேரத்தை ஏற்படுத்திக் கொண்டு உயிரை வாட்டித் துன்புறுத்துகிற அவர்கள் பெயரை நிந்தனையாகச் சொல்லுவதும் மகா பாபம். அப் பாஷண்டிகளின் பெயரைக் கூறிய என்னுடைய நாக்கு குற்றப்பட்டுவிட்டது. ஆகையால், கள்ளினால் கழுவிச் சுத்தப்படுத்த வேண்டும்.

தேவ: அப்படியானால், இன்னொரு கள்ளுக்கடைக்குப் போகலாம்; வாரும்.

காபாலி: அப்படியே செய்வோம். வா, போகலாம். (போகிறார்கள்.) ஆகா! காஞ்சிமா நகரத்தின் அழகே அழகு. கோயில் கோபுரங்களின் மேல் படிந்துள்ள மேகங்களினால்[1] உண்டாகும் இடிமுழக்கம், முரசுகள் ஒலிக்கிற முழக்கத்தோடு மாறுபட்டொலிக்கிறது! மாலைகளும் பூச் செண்டுகளும் நிறைந்த பூக்கடைகள் இளவேனிற் காலத்தைக் காட்டுவதுபோல் இருக்கின்றன! மங்கையரின் சிலம்பொலி காமதேவனுடைய வெற்றி முழக்கத்தின் ஆரவாரம்போல் இருக்கிறது!

தேவ: ஐயா! காஞ்சிமாநகரம் வாருணி[2] தேவியைப்போல இனிமையாகக் காணப்படுகிறது!

காபாலி: ஆமாம்! ஆமாம்! அதோ, அந்தக் கள்ளுக்கடையைப் பார்! அது யாகசாலையைப்போன்று எவ்வளவு அழகாகக் காணப்படுகிறது! கடையின் பெயரைத் தாங்கிநிற்கும் கம்பம், யாகசாலையில் உள்ள யூபஸ்தம்பம்போல் காணப்படுகிறது. மதுபானம் சோமபானம்

1. காஞ்சியில் கோபுரங்களின்மேலே தவழும் மேகங்களை மகேந்திரவர்மன் கூறுவதுபோலவே, இவன் காலத்தில் இருந்த திருநாவுக்கரசரும் காஞ்சியில் கருமேகங்கள் தவழ்ந்ததைக் குறிப்பிடுகிறார். "கருமுகில் தவழுமாடக் கச்சியேகம்பனீரே" என்பது அவர் வாக்கு. (அப்பர்: திருவேகம்பம் நேரிசை 2.)

2. வாருணி என்பது, மயக்கந்தரும் மதுபானங்களுக்கும், வருணதேவனுடைய மகளுக்கும் பெயர்.

போலக் காணப்படுகிறது. கள்குடிப்போர், யாகசாலையில் உள்ள பிராமணர் போலக் காணப்படுகிறார்கள். கள் கலயங்கள் சோமபானத்தை வைக்கும் பாத்திரங்கள்போல் இருக்கின்றன. அங்கு விற்கப்படும் சுவையுள்ள மச்சமாமிசங்கள், யாகத்தில் இடப்படும் ஆகுதிகள் போலக் காணப்படுகின்றன. குடிகாரர்களின் வெறிப்பேச்சு, யஜுர் வேதத்தின் யஜுஸைப் போல் இருக்கிறது. அவர்கள் பாடும் பாட்டுகள் சாமகானத்தை ஒத்திருக்கின்றன. கள்ளை முகந்து எடுக்கும் அகப்பை, யாகத்தீயில் நெய் சொரியும் கரண்டி (தர்வி) போல இருக்கிறது. குடிவேட்கையே யாகாக்கினி போலும். கள்ளுக்கடைக்காரன், யாகத்தை நடத்தும் யஜமானன் போலக் காணப்ப

வ: ஆமாம்! அங்குச் சென்று நாம் )லவசமாகப் பெறுகிற மதுபானம், யாகத்தில் உ
யை ஒத்திருக்கிறது!

காபாலி: ஓகோ! குடிகாரர் ஆடும் கூத்து எவ்வளவு அழகு! கொட்டு முழக்கத்திற்கு ஒத்தாற்போல ஆடியும் அபிநயித்தும் பேசியும் முகஜாடை காட்டியும் ஆடுவது, எவ்வளவு நேர்த்தி! மேலாடையை ஒரு கையினால் உயரத்தூக்கிப் பிடித்து, அவிழ்ந்து விழுகிற அரையாடையை மற்றொருகையில் பிடிக்கும்போது, தாளம் தவறிவிடுகிறது. கழுத்தில் அணிந்துள்ள மாலைகள்

தேவ: ஐயா, நீர் ஒரு நல்ல ரசிகர்!

காபாலி: கிண்ணங்களில் பெய்யப்படும் வாருணிதேவி,[1] மங்கையொருத்தித் தன் ஆடை அணிகளைக் கழற்றி வைத்துவிட்டதை ஒக்கும்; ஊடல் தீர்ந்த தலைவன் தலைவியரை ஒக்கும்; வாலிப வயதின் வளமையை ஒக்கும்; வாழ்க்கையின் விளையாட்டையொக்கும்.

1. கள், மதுபானம்.

அன்பே, தேவசோமா ! முன்னொரு காலத்திலே, சிவபெருமான் தமது நெற்றிக் கண்ணினால் காமன் உடலை எரித்துச் சாம்பலாக்கினார் என்று கூறுவது பொய்க்கதையே. அந்தக் காமனுடைய உடம்பு, அனலினால் வெண்ணெய்போல் உருகி நமது உள்ளத்தில் பாய்ந்து காமமாக

தேவ : ஆமாம் ஐயா. நீர் சொல்லுவது முழுவதும் சரியே. உலகத்துக்கு நல்லதையே செய்கிற சிவபெருமான், உலகத்தை ஒருபோதும் அழிக்கமாட்டார்.

[ஒருவரை யொருவர் கன்னத்தில் தட்டிக்கொள்கிறார்கள்.]

காபாலி : அம்மணீ ! பிக்ஷாந்தேஹி !

[உள்ளிருந்து ஒரு குரல் : இதோ இதை வாங்கிக்கொள், ஐயா.]

காபாலி : இதோ பெற்றுக்கொள்கிறேன். தேவசோமா ! என்னுடைய கபால பாத்திரம் எங்கே?

தேவ : அதைக் காணவில்லையே !

காபாலி : (யோசித்து) அந்தக் கள்ளுக்கடையில் அதை மறந்து வைத்துவிட்டோம் போலிருக்கிறது, நல்லது. அங்கே போய்ப் பார்ப்போம்

தேவ : அன்போடு அளிக்கும் பிச்சையை வாங்காமலிருப்பது முறையல்லவே. இப்போது என்ன செய்வது?[1]

காபாலி : 'ஆபத்தர்ம'ப்படிச் செய். இந்த மாட்டுக் கொம்பில் வாங்கிக்கொள்.

தேவ : அப்படியே செய்கிறேன்.

[பிச்சையை மாட்டுக் கொம்பில் பெற்றுக் கொள்கிறாள் பிறகு, இருவரும் சென்று கபால பாத்திரத்தைத் தேடுகிறார்கள்.]

1. காபாலிகர், பிச்சையைக் கபால பாத்திரத்தில் (மண்டை ஓட்டில்) பெறவேண்டும் என்பது மரபு. கபாலம் காணாமற் போய்விட்டபடியால், தேவசோமை கவலைப்படுகிறாள்.

காபாலி: இங்கேயும் அதைக் காணுமே. எங்குபோய் விட்டது! (ஆத்திரத்துடன்) ஓ! மகேஸ்வரர்களே, மகேஸ்வரர்களே! என்னுடைய கபால பாத்திரத்தைக் கண்டீர்களா? மகேஸ்வரர்கள் என்ன சொல்லுகிறார்கள்? 'இல்லை. நாங்கள் பார்க்கவில்லை' என்று சொல்லுகிறார்கள்? அந்தோ! நான் கெட்டேன். என்னுடைய தூய்மையான காபாலிகவிரதம் அழிந்தது கபாலபாத்திரம் இல்லாமல், நான் எப்படி காபாலிகனாவேன? நான் உண்ணவும் குடிக்கவும் அந்தத் தூய கபாலபாத்திரம் எவ்வளவு உதவியாக இருந்தது! அப் பாத்திரம் போய்விட்டபடியால், ஒரு நல்ல நண்பனை இழந்துவிட்டதுபோல், என்னுடைய மனம் கலங்குகிறது. (தரையில் விழுந்து தலையில் அடித்துக்கொள்கிறான்.) ஆ! தெரிந்தது! தெரிந்தது! கபாலபாத்திரம், காபாலிக விரதத்துக்கு 'லக்ஷண மாத்திரம்'[1] தான். கபால பாத்திரத்தை இழந்துவிட்டபடியினாலேயே என் காபாலிக விரதத்தை நான் இழந்து விடவில்லை. [எழுந்திருக்கிறான்.]

தேவ: அந்தக் கபால பாத்திரத்தை யார் எடுத்திருப்பார்கள், ஐயா?

காபாலி: அதில், வறுத்த இறைச்சியை வைத்திருந்தபடியால், அதை ஒரு நாயாவது எடுத்திருக்க வேண்டும்; அல்லது ஒரு பௌத்த பிக்ஷுவாவது எடுத்திருக்க வேண்டும்.

தேவ: அப்படியானால், இந்தக் காஞ்சிமா நகரம் முழுவதும் தேடிப் பார்த்து அதைக் கண்டுபிடிப்போம்.

[இருவரும் நடந்து செல்கிறார்கள். ஒரு பௌத்த பிக்ஷு தன் கையில் ஒரு மண்டையை[2] ஏந்தி, அதைத் மேலாடையில் மறைத்துக்கொண்டு வருகிறான்.]

1. காபாலிகன் தர்க்க சாஸ்திரத்தைத் தனக்குத் கொண்டு சமாதானம் அடைகிறான்.

2. மண்டை என்பது மண்டை ஓடு அல்ல. மரம் அல்லது மண்ணால் செய்யப்பட்ட பாத்திரம். இதற்கு மண்டை என்று

பௌ. பிக்கு : ஆகா ! நம்முடைய உபாசக அன்பன் தன தாச செட்டியின் தர்மம், மற்ற எல்லாருடைய தர்மங் களைவிட மேம்பட்டது. அவன் எனக்குக் கொடுத்த இந்த உணவு, பலவித மச்சமாமிசக் கறி வகைகளு டன் மணமும் சுவையும் உள்ளது. இப்போது இராச விகாரைக்குப்[1] போகவேண்டும்.

[தனக்குள் நடந்துகொண்டே]

ஆ! பகவான் ததாகதருடைய (புத்தருடைய) கருணையே கருணை. என்னைப்போன்ற, பௌத்த சங் கத்தைச் சேர்ந்த பிக்குகள் வசிக்க நல்ல விகாரைகளை யும், படுத்துத் தூங்க நல்ல படுக்கைகளையும் அனு மதித்து இருப்பதோடு, முற்பகலில் வயிறாரச் சாப் பிடவும் பிற்பகலில் சுவையும் மணமும் உள்ள பானங் களைப் பருகவும், ஐந்துவகை நறுமணமுள்ள தாம் பூலங்களைத் தரிக்கவும், மெல்லிய ஆடைகளை யுடுக் கவும் அவர் அனுமதித்துள்ளார். ஆனால், பெண் மகளிரையும் மதுபானங்களையும், கூடாது என்று அவர் ஏன் விலக்கி வைத்தார்? எல்லாம் அறிந்த பகவான் இவை இரண்டையும் தள்ளிவைத்திருப் பாரா? என்போன்ற வாலிபப் பிக்குகளிடத்தில் பொறாமையும் வெறுப்புங் கொண்ட அந்தக் கிழப் பிக்குகள், பெண்ணையும் கள்ளையும் உபயோகிக்கலாம் என்று பகவான் எழுதிவைத்ததை, மறைத்துவிட் டார்கள் என்று நினைக்கிறேன். மாற்றி எழுதப் படாத, திரிபிடகத்தின் மூலநூல் எங்கே கிடைக்கும்! அப்படிப்பட்ட நூல் ஒன்று கிடைக்குமானால், புத்த ருடைய முழுப் போதனையையும் உலகத்துக்கு பௌத்த சங்கத்துக்கு நன்மை

[நடந்துசெல்கிறான்]

பெயர். பௌத்த பிக்ஷுக்கள் இப்பாத்திரத்தில் பிச்சை பெற வேண்டும் என்பது மரபு.

1. இராசவிகாரை என்பது காஞ்சிபுரத்தில் இருந்த செல்வ மிக்க பௌத்த மடம்.

தேவ: அதோ பார் ...பார்த்துக் கொண்டு, உடம்பை அடக்கி ஒடுக்கி, நல்லவர்கள் நிறைந்த ...ந்தத் தெருவிலே, வலப்பக்கமும் ... பக்கமும் பார்த்துக்கொண்டு, பயந்தவன்போல அந்த ...ள் வேகமாக நடக்கிறான்.

காபாலி: ...மாம்! ஆமாம்! அவன் கையில் எதையோ மேலாடையினால் மறைத்து வைத்துக்கொண்டிருக் ...ான்.

தேவ: அப்படியானால் அவனைப் பிடித்து நிறுத்தி, என்ன வைத்திருக்கிறான் என்பதைப் பார்த்துவிடுவோம்.

காபாலி: அப்படித்தான் செய்வோம். (வேகமாக நடந்து போய்) ஓய்! பௌத்த சந்நியாசி, நில் அங்கே.

பௌ. பிக்ஷு: யார் என்னை இவ்வாறு அழைப்பது! (நின்று திரும்பிப்பார்த்து) ஓ! ஏகம்பத்தில்[1] வசிக்கிற அந்தப் போக்கிரிக் காபாலிகன்! நல்லது, நான் இந்தக் குடிகாரப்பயலின் கேலிக்கூத்துக்கு ஆளாகக்கூடாது. (வேகமாக நடக்கிறான்.)

காபாலி: பார்த்தாயா, தேவசோமா! என்னுடைய கபால பாத்திரம் அகப்பட்டுவிட்டது. என்னைக் கண்ட வுடன், அந்தப்பயல் அச்சங்கொண்டு வேகமாக நடந்து தப்பித்துக்கொள்ளப் பார்ப்பதிலிருந்து பாத்திரத்தைத் திருடினவன் அவன்தான் என்பது உறுதியாகிறது. (ஓடிச்சென்று பிக்ஷுவை வழிமறிக் கிறான்.) திருட்டுப்பயலே! எங்கே போவாய்?

பௌ. பிக்ஷு: இல்லை. காபாலிக சகோதரா! இப்படி எல்லாம் பேசுவது சரியல்ல. (தனக்குள்) எவ்வளவு அழகுள்ள நங்கை இவள்!

காபாலி: ய்! பிக்ஷு. உன் கையில் இருப்பதைக் காட். உன் சீவரப் போர்வையில் பொதிந்து வைத்திருப்பதை நான் பார்க்கவேண்டும்.

பௌ. பிக்கு: பார்க்க அதில் என்ன இருக்கிறது? அது ஒரு மண்டை. என்னுடைய பிக்ஷைப் பாத்திரம்.

காபாலி: அதைத்தான் நான் பார்க்கவேண்டுமென்கிறேன்.

பௌ. பிக்கு: இல்லை. சகோதர! அப்படிச்சொல்லாதே. அதை நாங்கள் மூடி மறைத்துக்கொண்டு போகவேண்டும். உனக்கும் இது தெரிந்ததுதானே.

காபாலி: ஆம்; பொருள்களை இப்படி மறைத்துக்கொண்டு போவதற்காகத்தான் புத்தர், நீண்ட சீவரம் தரித்துக் கொள்ளச் சொன்னார்.

பௌ. பிக்கு: ஆமாம்; உண்மைதான். நீர் சொல்லுவது யம்.

காபாலி: அது சம்விரதிசத்தியம்.[1] நான் பரமார்த்த சத்தியத்தை அறிய வேண்டும்.

பௌ. பிக்கு: நன்று, நன்று. உன்னுடைய கேலிப் பேச்சுப் போதும். பிக்ஷைநேரம் கடந்து விடுகிறது நான் போகவேண்டும். [அப்பால் நடக்கிறான்]

காபாலி: கள்ளப்பயலே. எங்கே போகிறாய்? என் மண்டைப்பாத்திரத்தைக் கொடுத்துவிட்டுப் போ.

[பிக்கு போர்த்துள்ள சீவர ஆடையின் முன்தானையைப் பிடித்துக் கொள்கிறான் காபாலிகன்.]

பௌ. பிக்கு: புத்தருக்கு வணக்கம்.

---

1. சம்விரதிசத்தியம், பரமார்த்தசத்தியம் என்பன, பௌத்தரில் ஒரு சாராருடைய தத்துவ சாத்திரத்தில் கூறப்படுவன. காபாலிகன் இந்தச் சொற்களைக் கூறிப் பௌத்த பிக்குவைக் கேலி செய்கிறான்.

காபாலி: கரவடனுக்கு வணக்கம் என்று சொல்லு. களவுநூலை எழுதினவன் அவன். புத்தர் கரவடனுக்கும் மேலானவர். பிராமணர் தூங்கும்போது, மகாபாரதத்திலிருந்தும் வேதாந்தத்திலிருந்தும் திருடி நூல் எழுதவில்லையா உன்னுடைய புத்தர்[1]

பௌ. பிக்கு: பாவம் சாந்தி. பாவம் சாந்தி.

காபாலி: இவ்வளவு கைதேர்ந்த பிக்குவின் பாவம் சாந்தியாகாமல் இருக்குமா?

தேவ: ஐயா! நீர் களைப்படைந்திருக்கிறீர். அந்தக் கபால பாத்திரம் நல்லபடியாகக் கிடைக்கப் போகிறதில்லை. ஆகையால், இந்த மாட்டுக்கொம்பில் இருக்கிற கள்ளைக் குடித்து, களைப்புத் தீர்ந்தபிறகு, அவருடன் வாதம் செய்யுங்கள்.

காபாலி: சரி. அப்படியே ஆகட்டும். (தேவசோமை மாட்டுக் கொம்பிலுள்ள மதுவைக் கொடுக்கிறாள். காபாலிகன் வாங்கிக் குடித்துவிட்டு) நீயும் கொஞ்சம் குடி. நீயும் களைப்படைந்திருக்கிறாய். (அவளிடம் கொடுக்கிறான்.)

தேவ: அப்படியே. [அவளும் குடிக்கிறாள்.]

காபாலி: இவர் நமக்குத் தீங்கு செய்தவர்தான். ஆனாலும், சமயநூல், எல்லோருக்கும் பகிர்ந்துகொடுக்கும்படி கட்டளையிடுகிறது. ஆகையால் இந்தச் சந்நியாசிக்கும் அதில் கொஞ்சம் கொடு.

தேவ: அப்படியே. ஐயா! இதை வாங்கிக்கொள்ளுங்கள்.

---

1. கரவடன் என்பவர் களவுநூலை எழுதியவர் என்று கூறப்படுகிறார். இவர் உண்மையில் இருந்தவர் அல்லர் என்றும் கற்பனைப் பெயர் என்றும், அறிஞர்கள் கருதுகிறார்கள். வேதாந்தம் என்பது உபநிஷத்துக்கள். உபநிஷத்தில் உள்ள கருத்துக்கள் சில புத்தருடைய உபதேசத்திலும் உள்ளன. காபாலிகன் கூறுவதுபோல மகாபாரதத்திலிருந்து புத்தர் எதையும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை.

பௌ. பிக்கு : (தனக்குள்) நம்முடைய அதிர்ஷ்டம், நல்ல மதுபானம் கிடைக்கிறது! ஆனால் யாரேனும் பார்த்து விட்டால் என்னசெய்வது? (அவளிடம்) அம்மணி! அப்படிச் சொல்லாதே. எங்களுக்கு அது தகுந்த தல்ல. [நாக்கைச் சப்பிக்கொள்கிறான்]

தேவ : போமையா, போம். உமக்கு இவ்வளவு நல்ல அதிர்ஷ்டம் எப்போ கிடைக்கப் போகிறது.

காபாலி : தேவசோமா! அவருக்கு ல பொங்கி வாய் ஊறுகிறது. ஆகையால், பேச்சுக் குழறுகிறது.

பௌ. பிக்கு : உங்களுக்கு இன்னும் என்மேல் இரக்கம் உண்டாகவில்லையா!

காபாலி : எனக்கு இரக்கம் இருந்தால் எப்படி வீதராக னாக[1] இருக்க முடியும்?

பௌ. பிக்கு : வீதராகராக இருப்பவர் கோபம் இல்லாதவ ராகவும் 5க்க வேண்டுமே.

காபாலி : என்னுடைய பொருளைக் கொடுத்துவிட்டால், கோபம் இல்லாதவனாக இருப்பேன்.

பௌ பிக்கு : உன்னுடைய "பொருள்" என்பதன் பொருள் என்ன?

காபாலி : கபால பாத்திரந்தான்.

பௌ. பிக்கு : என்ன! கபாலபாத்திரமா?

காபாலி : "கபால பாத்திரமா?" என்று கேட்கிறார் இவர்! இது இவருக்கு இயற்கைதானே. கண்ணுக்குப் புலப் படும் உண்மைப் பொருள்களை மண், விண், கடல், மலை முதலியவற்றை எல்லாம் மாயை என்றும்

1. வீதராகன் என்பது ஆசையற்றவன் என்று பொருள் படும். புத்தருக்கு வீதராகன் என்ற பெயரும் உண்டு.

பித்தை[1] என்றும் கூறியவரின் வழிவந்த மகன் அல்லவா இவர்? ஆகையால், சிறு மண்டையோட்டையும் "இல்லை" என்று சொல்லி மறைக்க மாட்டாரா?

தேவ: இப்படி எல்லாம் நயமாகப்பேசி நல்லவிதமாகக் கேட்டால் கொடுக்கமாட்டார். அவர் இருக்கிற கபால பாத்திரத்தைப் வாருங்கள்.

காபாலி: ஆமாம்; அதுதான் சரி. அப்படியே செய்கிறேன்.

[பிடுங்கப் பார்க்கிறான்]

பௌ. பிக்கு: எட்டிநில். காபாலிகத் திருட்டுப் பயலே.

[கையால் விலக்கித்தள்ளிக் காலினால் உதைக்கிறான்]

காபாலி: விழுந்து விட்டேனே.

தேவ: தேவடியாள் மகனே! உன்னை உயிரோடு விடுகிறேனா பார்!

[ஓடிப்போய்ப் பிக்குவின் தலையைப் பிடிக்கிறாள். பிக்குவுக்கு மொட்டைத்தலை யாகையால் அவனைப் பிடிக்க முடியாமல் அவளும் கீழே விழுகிறாள்.]

பௌ. பிக்கு: (தனக்குள்) பிக்குகள் தலைமயிரை மழித்து விட வேண்டும் என்று கட்டளையிட்ட புத்தபகவான் திரிகாலஞானி. (உரக்க) எழுந்திரு அம்மணி, எழுந் திரு

[illegible] கையைப் பிடிக்கிறான்]

1. பழைய தேரவாதப் பௌத்த மதத்தில், கணபங்கம் கூறப்படுகிறதே யன்றி மாயாவாதம் கூறப்படவில்லை. ஆனால், மகாயான பௌத்த மதத்திலே மாயாவாதம் கூறப்படுகிறது. ஏகான்மவாதியான சங்கராச்சாரியார், மகாயான பௌத்த மதத்திலிருந்து மாயாவாதத்தை எடுத்துக்கொண்டார் என்பர்.

காபாலி : பாருங்கள், மகேசுவரர்களே ! பாருங்கள், சந்நியாசி என்று சொல்லிக்கொள்ளும் இந்த நாகசேனன் —போக்கிரிப்பயல், என் மனைவியின் கையைப் பிடித்துப் பாணிக்கிரகணம்[1] செய்கிறான்.

பௌ. பிக்கு : இல்லை. சகோதரா ! அப்படிச்சொல்லாதே. துன்பத்தில் விழுந்தவர்களைக் கைதூக்கிவிடவேண்டும் என்பது எங்கள் மதக்கட்டளையாகும்.

காபாலி : இதுவும் உங்கள் சர்வஜ்ஞன் (புத்தன்) கட்டளையா? முதலில் விழுந்தவன் நான் அல்லவா? நல்லது, இருக்கட்டும். இப்போ, உன்னுடைய மண்டை ஓடு என் கைக் கபாலபாத்திரமாகப் போகிறது.

[எழுந்து சென்று பிக்குவைத் தாக்குகிறான்.]

பௌ. பிக்கு : ஃகா ! துக்கம. தயம.[2]

காபாலி : பாருங்கள், மகேசுவரர்களே ! பாருங்கள் ! சந்நியாசி வேடம் பூண்ட இந்தப் போக்கிரிப்பயல் என்னுடைய கபால பாத்திரத்தைத் திருடிக்கொண்டதும் அல்லாமல், கூப்பாடு போட்டு ஓலமிடுகிறான். நல்லது, நானும் ஓலமிடுகிறேன். ஐயகோ ! பிராமணர்களுக்கு ஆபத்து, பிராமணர்களுக்கு ஆபத்து.

[இக் கூப்பாட்டைக் கேட்டு ஒரு பாசுபதன் வருகிறான்]

பாசுபதன் : ஓய் ! சத்தியசோமரே ! எதற்காகக் கூப்பாடு போடுகிறீர் ?

காபாலி : ஓ ! பப்ருகல்பரே ! பாரும். துறவி என்று சொல்லிக்கொள்ளும் இந்தப் போக்கிரிப்பயல், நாக

1. பா ரம செய்கிறான் என்பதற்குக் கையைப் பிடிக்கிறான் என்றும், மனைவியாக்கிக் கொள்கிறான் என்றும் இரண்டு பொருள்கள் உள்ளன.

2. அநித்தியம், துக்கம், அநாத்மம் என்னும் பௌத்த மதக் கொள்கையை ஈண்டு நூலாசிரியர் பிக்குவின் வாயிலாக எள்ளனம் செய்கிறார்.

என்னுடைய கபாலபாத்திரத்தைத் திருடிக் கொண்டு கொடுக்கமாட்டேன் என்கிறான்.

பாசு: (தனக்குள்) இவள் நல்ல அழகி! புல்லைக்காட்டிப் பசுவைக் கொண்டுபோவதுபோல, இந்தச் சந்நியாசி—அம்பட்டத்தாசி மகன்—தன் இடுப்பில் செருகியுள்ள காசைக்காட்டி இவளை அடித்துக்கொண்டு போகப் பார்க்கிறான். இருக்கட்டும். இவனுக்குச் சார்பாகப் பேசி, காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டுபோன கதைப்படி செய்கிறேன். (உரக்க) நல்லது. நாகசேனரே! இவர் சொல்லுவது [illegible]

பௌ. பிக்கு: ஐயா, தாங்கள் அதை நம்புகிறீரா? பிறர் பொருளை, அதற்குரியவர் கொடுத்தாலன்றி, எடுக்கக் கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை. பொய் பேசக்கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை. காம கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை. கொல்லக் கூடாது என்பது எங்கள் சமயக் ளை. குறித்த காலந்தவறி உணவு கொள்ளக் கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை. தர்மம் சரணங் கச்சாமீ.[1]

பாசு: என்ன, சத்தியசோமரே! இது அவர்கள் சமயக் கட்டளை. இதற்கு நீர் என்ன சொல்லுகிறீர்?

காபாலி: பொய் பேசக் கூடாது என்பது எங்கள் சமயக் கட்டளை.

பாசு: இருவரும் சொல்லுவது நியாயமாக இருக்கிறது. இவர்களுக்கு எப்படி நியாயம் தீர்ப்பது?

பௌ. பிக்கு: புத்தர் உபதேசங்களைப் பின்பற்றி ஒழுகும் ஒரு பௌத்த பிக்கு, ஒரு மதுக்கிண்ணத்தை எடுக்க என்ன நியாயம் [illegible]

1. பௌத்த தர்மத்தைச் சரணம் அடைகிறேன் என்பது இதன்பொருள்.

பாசு: 'பிரதிக்ஞா மாத்திரத்திளுல் ஒன்றும் சித்திக்காது' என்று சொல்லுகிறீர்களே. மதுக்கிண்ணம் உமக்கு வேண்டியதில்லை என்பதனுலேயே நீர் அதை எடுக்க வில்லை என்று எப்படி அறிவது?

காபாலி: பிரத்தியக்ஷப் பிரமாணம் இருக்கும்போது, காரண காரியங்களைப் பற்றிப்பேசுவது பயனற்றது.

பாசு: பிரத்தியக்ஷப் பிரமாணம் என்று நீர் சொல்லுவதன் கருத்து என்ன?

தேவ: ஐயா! கபால பாத்திரத்தை அவர் போர்வையில் மறைத்து வைத்திருக்கிறார்.

பாசு: அப்படித்தாளு, ஐயா!

பௌ. பிக்கு: இந்த மண்டை மற்றவருடையதன்று.

காபாலி: அப்படியானுல், அதைக்காட்டு.

பௌ. பிக்கு: காட்டுகிறேன். [காட்டுகிறான்]

பாசு: பாருங்கள், மகேசுவரர்களே! பாருங்கள், இந்தப் பௌத்த பிக்குவின்மேல் இந்தக் காபாலிகன் அநியாயமாக அவதூறு சுமத்துவதைப் பாருங்கள்.

பௌ. பிக்கு: பிறர்பொருளை, அதற்குரியவர் கொடுத்தாலன்றி அதை எடுக்கக்கூடாது என்பது எங்கள் மதக் கட்டளை. பொய் பேசக்கூடாது என்பது எங்கள் மதக் கட்டளை. காம விழைவு கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை. உயிரைக் கொல்லக்கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை, குறித்த காலம் தவறி உணவு கொள்ளக்கூடாது என்பது எங்கள் சமயக்கட்டளை. தர்மம் சரணங் கச்சாமீ.

[பிக்கு கூத்தாடுகிறான். காபாலிகனும் அவனுடன் கூத்தாடுகிறான்]

பௌ. பிக்கு: சீச்சீ! வெட்கத்தால் தலைகுனிய வேண்டிய இவன் கூத்தாடுகிறான்.

காபாலி: போம், ஐயா, போம்! யார் கூத்தாடுகிறது? (நாற்புறமும் பார்த்து) காணாமற்போன என் கபால பாத்திரத்தை மீண்டும் கண்டபோது உண்டான சந்தோஷத்தினால், என்மனம் குதூகலமடைந்து கூத்தாடுகிறது.

பௌ. பிக்கு: நன்றாகக் கண்ணைத் திறந்து இந்தப் பாத்திரத்தைப் பாரும் ஐயா! இதன் நிறத்தையும் பார்.

காபாலி: இதற்கென்ன சொல்லுவது! இந்தப்பாத்திரம் காக்கையைப்போலக் கறுப்பாயிருக்கிறதே.

பௌ. பிக்கு: ஆகையால், இந்த மண்டை என்னுடையதுதான் என்பதை ஒப்புக்கொண்டீர் அல்லவா?

காபாலி: ஆம். நீர் நிறத்தை மாற்றுவதில் கைதேர்ந்தவர் என்பதை ஒப்புக்கொண்டேன். இதோ பார். இதோ நீர் போர்த்திருக்கும் சீவர ஆடை, முதலில் தாமரை நூலைப்போல் வெண்மையாக இருந்தது. அதைக் காவிதோய்த்துக் காலைவானத்தின் செந்நிறம் போலச் செய்துவிட்டீர் அல்லவா? அன்றியும், கழுவிப் போக்க முடியாத காஷாயத்தினால் (காவியினால்) அகத்தையும் புறத்தையும் மூடிவைத்திருக்கும் உம் மைச்சேர்ந்த என்னுடைய வெண்மையான கபால பாத்திரம் எவ்வாறு காஷாய நிறத்தை அடையாமல் இருக்கும்?[1]

தேவ: ஐயையோ! அநியாயமே! எல்லா லக்ஷணங்களும் பொருந்திய எங்கள் கபால பாத்திரம், பிரம்ம கபாலம்போலத் திவ்வியமாகவும் வெண்ணிலாப் போலப் பிரகாசமாகவும், எப்போதும் கள்ளின் மணம் வீசிக்கொண்டும் இருக்குமே. இப்போ, இவனுடைய அழுக்குத் துணியில் படிந்து இந்தமாதிரி, நிறம்

1. காஷாயம் என்பது துவர் (காவி) ஆடைக்கும், மனக் குற்றத்திற்கும் பெயர். இந்தச் சொல்லை இவ்விருபொருளிலும் சிலேடையாக வழங்குகிறான் காபாலிகன்.

மாறிக் கெட்டுப்போய்விட்டதே. இதற்கு நான் என்ன செய்வேன்! [அழுகிறான்]

காபாலி: தேவசோமா! வருத்தப்படாதே, அதை மறுபடியும் சுத்தம் செய்துவிடலாம். பெரியோர்கள் குற்றங்களுக்குக் கழுவாய் சொல்லியிருக்கிறார்கள். எப்படி என்றால், பிரம்மாவின் தலையைக் கிள்ளிய குற்றத்தைப் பிறையணிந்த எம்பெருமான் (சிவன்) கழுவாய் செய்துகொண்டார். துவஷ்டாவின் மகனை விருத்திராசுரனைக் கொன்ற பாவத்தை இந்திரனும் கழுவாய் செய்துகொண்டார். பப்ருகல்பரே! நான் சொல்லுவதில் தவறு உண்டா?

பாசு: நீர் சொல்லுவது சாஸ்திர சம்மதமானது.

பௌ. பிக்கு: பாத்திரத்தின் நிறத்தை மாற்றிவிட்டேன் என்றே வைத்துக்கொள்ளுங்கள். அதன் உருவத்தையும் அளவையும் எப்படி மாற்ற முடியும்?

காபாலி: நீங்கள் மாயாபுத்திரர்கள்[1] அல்லவா?

பௌ. பிக்கு: உம்மோடு எவ்வளவு நேரந்தான் வாதாடுவது? இதை நீர்தான் எடுத்துக்கொள்ளும், ஐயா!

காபாலி: புத்தருடைய தானபாரமிதைக்கு[2] இது ஒப்பானது.

பௌ. பிக்கு: இந்த நிலையில் எனக்கு உதவி செய்வோர் யார்?

---

1. மாயை யுடையவர்கள், அஃதாவது உலகம் மாயை என்னும் கொள்கை யுடையவர்கள் என்பது பொருள். அன்றியும் புத்தருடைய தாயார் பெயர் மாயாதேவி என்பது. இவ்விரு பொருளிலும் இச்சொல்லைக் காபாலிகன் வழங்குகிறான்.

2. தானபாரமிதை என்பது, போதி சத்துவர் புத்தராகப் பிறப்பதற்கு முன்பு செய்த பத்துப் பாரமிதைகளில் ஒன்று. பிக்கு, காபாலிகன் தொந்தரவு பொறுக்க முடியாமல் தன் பாத்திரத்தைக் கொடுத்துவிட, அதை, புத்தர் முன்பிறப்பில் செய்த தானபாரமிதைக்கு ஒப்பிட்டுக் கேலிசெய்கிறான் காபாலிகன்.

காபாலி : ஏன்? புத்த, தர்ம, சங்கந்தான்.

பாசு : இந்த வழக்கை என்னால் தீர்க்க முடியாது. நியாய மன்றம் போய்த் தீர்த்துக்கொள்வது நல்லது.

தேவ : அப்படியானால், கபால பாத்திரத்திற்கு ஒரு கும்பிடு.

பாசு : ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?

தேவ : பல விகாரைகளிலும் இருந்து கிடைக்கிற காணிக்கைப் பணத்தை இந்தப் பிக்கு தன்னுடைய இராஜ விகாரையில் குவித்து வைத்திருக்கிறார். நீதிமன்றத்தில் இருக்கிறவர்களின் வாயில், அந்தப் பணத்தைப் போட்டு அவர்கள் வாயை அடக்கிவிடுவார். நானோ ஏழைக் காபாலிகை. எனக்கு என்ன இருக்கிறது? பாம்புத்தோலும் திருநீறுந்தான் இருக்கிறது. நியாய மன்றம் போக எனக்குக் காசு ஏது?

பாசு : அப்படியல்ல. நியாய மன்றத்தில் இருக்கிறவர்கள் நேர்மையும், திண்மையும், உறுதியும், நுட்ப அறிவும், குடிப்பிறப்பும் உள்ளவர்கள். மாளிகையைத் தூண்கள் தாங்குவதுபோல, நீதியை இவர்கள் தாங்குகிறார்கள்.

காபாலி : நீங்கள் சொல்லுவது என்ன? யோக்கியனாக உள்ளவன் அஞ்சவேண்டிய காரணமே இல்லை.

பௌ. பிக்கு : அப்படியானால், நீதி மன்றத்துக்கு நடவுங்கள்.

பாசு : ஆமாம்! அதுதான் நல்லது.

[எல்லோரும் நடக்கிறார்கள். பைத்தியக்காரன் ஒருவன் வருகிறான்.]

பைத்தியக்காரன் : அதோ, அந்த நாய்! வறுத்த மாமிசம் உள்ள அந்த மண்டையோட்டைத் திருடிக்கொண்டு ஓடுகிறாயா? தேவடியாள் மகனே! நீ எங்கே போகப்

பார்க்கிறாய்? மண்டையைப் போட்டுவிட்டு, அது தின்ன வருகிறது. (நாற்புறமும் ... க் கல்லினால் அதன் பல்லை உடைக் பார். மண்டையைப் போட்டுவிட்டு ஓடுகிறாயா, பித்துக்கொள்ளி நாயே! கடல் மானத்திலே குதித்துப் பன்றியின்மேல் ஏறிக்கொண்டு ராவணனை அடித்து இந்திரன் மகனைத் தூக்கிக்கொண்டு வந்துடுத்து. அடே எருக்கஞ்செடி! நீ என்ன சொல்றே? பொய் இன்னு சொல்றே. இந்தத் தவளையைக் கேட்டுப்பார். மூணு லோகத்திலும் இணையில்லாத எனக்குக்கூட சாட்சி வேணுமா? என்ன செய்றேன் பார். அது வைச்சிட்டுப் போன அந்தச் சோத்தைத் தின்னுபோடறேன்.

[தின்கிறான். பிறகு அழுகிறான்.]

ஓ, ஓ! நான் அழுகிறேன்; அழுதுண்டே சாகிறேன். (அழுகிறான். பிறகு நாற்புறமும் பார்க்கிறான்) ஏண்டா என்னை அடிக்கிறீங்கோ; போக்கிரிப் பசங்களா! பீமன் மைத்துனன் கடோற்கஜனைப்போல நான் அவனுக்கு—அவன் பேர் என்ன? அவன், அவன், அவனுக்கு மச்சினன்தான். ஆயிரம் பேய்கள் என் வயித்திலே புகுந்துகொண்டு குதிக்கின்றன. கையிலே ஈட்டியை வைச்சிக்கிட்டுக் குத்துகின்றன. நூறு புலியையும் பாம்பையும் வாயிலிருந்து கக்குகிறேன். என்ன தொந்தரவு செய்கின்றன! பொறுத்துக்கொள் ஐயா, பொறுத்துக்கொள்; தப்பை மன்னிச்சிக்கோ. இந்த மாமிசத்தைப் பற்றிக் கவலை வேண்டாம். (பார்க்கிறான்.) அதோ நம்முடைய குரு சூரநந்தி இருக்கிறார்! அங்கே போறேன்.

: அதோ, அந்தப் பைத்தியக்காரன் இங்கே வருகிறான். குப்பையில் கிடந்த கிழிந்துபோன கந்தல் சட்டையை அணிந்துகொண்டு, பறட்டைத் தலையுடன் காய்ந்து போன மாலைகளைக் கழுத்தில் அணிந்துகொண்டு,

கையில் உள்ள இறைச்சிக்காகக் காக்கைகள் சூழ்ந்து பறந்துவர, குப்பைமேடு மனித உருவங்கொண்டு வருவதுபோல வருகிறான்; பாருங்கள்.

பைத்திய: (அருகில் வந்து) ஒரு சண்டாளப் பயலுடைய, மதிப்புள்ள ஒரு நாயினிடமிருந்து இந்த மண்டை யோட்டை வாங்கிக்கொண்டு வந்தேன். பெரிய மனசு பண்ணி இதை வாங்கிக் கொள்ளுங்கோ.

பாசு: (நோக்கி) அதற்குத் தகுதியானவர் ...டம அதைக் கொடு.

பைத்திய: ஓ, பிராமணா! இதை வாங்கிக் கொள்ளும்

பௌ. பிக்கு: கௌரவம் உள்ள இந்தப் பாசுபதன் ... ...யானவர்.

பைத்திய: (காபாலிகனை அணுகி, மண்டை யோட்டை அவன் முன்பு வைத்து அவனை வலம் வந்து காலில் விழுந்து கும்பிடுகிறான்.) தெய்வமே! உன்னைக் கும்பிடுகிறேன். வரம் தரவேணும்.

காபாலி: இதோ நம்முடைய கபால பாத்திரம்!

தேவ சோ: ஆமாம்! அதுதான்! அதுதான்!!

காபாலி: சிவபெருமான் திருவருளால் நான் மீண்டும் காபாலி ஆனேன்.

[மண்டையோட்டை எடுத்துக்கொள்கிறான்]

பைத்திய: தேவடியாள் மகனே, விஷத்தைக் குடியேன்.

[மண்டையோட்டைப் பிடுங்கிக் கொண்டு போகிறான்.]

காபாலி: (அவனைத் தொடர்ந்து சென்று) இந்த யமதூதன் என்னுடைய உயிரைக் கொண்டுபோகிறான். ஐயா, எனக்கு உதவி செய்யுங்கள்.

பிக்குவும் பாசுபதனும்: அப்படியே உதவி செய்கிறோம்.

[எல்லோரும் பைத்தியக்காரனை மறித்துக் ... கள்.]

காபாலி : ஏ ! நில்லு, நில்லு.

பைத்திய : என்னை ஏன் வழி மறிக்கிறுங்கோ ?

காபாலி : என்னுடைய கபால பாத்திரத்தைக் கொடுத்து விட்டுப் போ.

பைத்திய : முட்டாள் ! இது தங்கப் பாத்திரம் இன்னு தெரியலையா, உனக்கு ?

காபாலி : இது தங்கப் பாத்திரம் என்றால், இதை யார் செய்தார்கள் ?

பைத்திய : அதைச் சொல்லட்டுமா ? பொன் நிறமான போர்வையைப் போர்த்துக்கிட்டு இருக்கானே, அந்தத் தட்டான் ; அவன் தான் இதைச் செய்தான். இது பொன் கிண்ணம்.

பௌ. பிக்கு : என்ன சொல்லுகிறாய் !

பைத்திய : இது பொன் கிண்ணம் ; தங்கக் கிண்ணம்.

பௌ. பிக்கு : இவன் என்ன, பைத்தியக்காரனா ?

பைத்திய : அடிக்கடி பைத்தியக்காரன், பைத்தியக்காரன் இன்னு சொல்லுறுங்கோ. இதைப் பிடிச்சுக்கோ! அந்தப் பைத்தியக்காரனை எனக்குக் காட்டு.

[காபாலிகனிடம் மண்டையோட்டைக் கொடுக்கிறுன்.]

காபாலி : (மண்டையோட்டை வாங்கிக்கொண்டு) அதோ ! அந்தச் சுவருக்குப் பின்னுல் அவன் இருக்கிறுன். சீக்கிரமாக ஓடிப்போய் அவனைப் பிடித்துக் கொள்.

பைத்திய : அப்படியே ஆகட்டும் [ஓடுகிறுன்.]

பௌ. பிக்கு : வாதி வெற்றிபெற்றதற்காக மகிழ்ச்சியடை

காபாலி : (மண்டையோட்டை மார்பில் அணைத்துக் கொண்டு) இதுவரையில் மகேஸ்வரனைப் பின்பற்றி விரதம் தவருமல் நடந்து வந்தேன். என் அருமைக் கபால

பாத்திரமே! உன்னைப் பிரிந்தபோது மகேஸ்வரனும் என்னை விட்டுப் பிரிந்து விட்டான். உன்னை மறுபடியும் பெற்றபோது, மீண்டும் மகேஸ்வரன் எனக்குக் காட்சியளிக்கிறான்!

தேவ: ஐயா! உம்மைப் பார்த்தால் [illegible] ந்திர னோடு கூடிய [illegible] வு[1] போலக் [illegible] ர். [illegible] எனக்குக் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது.

பாசு: ஐயா, தங்கள் கபால பாத்திரத்தைத் தாங்கள் மீண்டும் பெற்றுக் கொண்டதற்காக மகிழ்ச்சியடைகிறேன்.

காபாலி: நான் அடைந்துள்ள சந்தோஷம் தங்களைச் சேர்ந்தது.

பாசு: (தனக்குள்) 'குற்றமற்றவனுக்கு அச்சமில்லை' என்பது சரிதான். இந்தப் பௌத்தபிக்கு இன்று தப்பித்துக்கொண்டான். (வெளிப்படையாக) என்னுடைய நண்பருடைய மகிழ்ச்சியைக் கண்டு நானும் மகிழ்ச்சியடைகிறேன். தாமவேளை ஆகிவிட்டது. கிழக்குப் பக்கமுள்ள எம்பெருமானிடம்[2] செல்லவேண்டும்.

---

1. கருநிறமுள்ள காபாலிகன் மார்பில், வெண்ணிறமுள்ள மண்டை ஓடு பொருந்தியிருப்பதை உவமானப்படுத்திக் கூறுகிறான்.

2. காஞ்சிபுரத்தில் ஏகாம்பர ஈசுவரர் கோவிலுக்குக் கிழக்[illegible] இருந்த சுடுகாடு. இப்போதும், ஏகாம்பர ஈசுவரர் கோயிலுக்கு எதிரில், கிழக்குப்புறமாக திருக்கச்சி மயானம் என்னும் கோயில் இருக்கிறது. அப்பர் சுவாமிகளும் தமது தேவாரத்தில்,

" சவந்தாங்கும் மயானத்துச் சாம்பல் எலும்புத்
தலையோடு மயிர்க்கயிறு தரித்தான் தன்னை
பவந்தாங்கும் பாசுபத வேடத்தானை பண்டமரர்
கொண்டுகந்த வேள்வி எல்லாம்
கவர்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னை........"

என்று இவ்விரு கோயில்களையும் குறித்திருக்கிறார். இந்நாடகத்தில் வரும் பாசுபதன் இங்கு இருந்தவனுதல் வேண்டும்.

சச்சரவு கொண்டிருந்த உங்கள் இருவருக்கும், கிராதார்ஜுனர்[1] போல நட்பும் அன்பும் உண்டாகட்டும்.
(பாசுபதன் போகிறான்)

காபாலி: நாகசேனரே! ஏதேனும் பிழை செய்திருந்தால் மன்னித்தருளும்.

பௌ. பிக்கு: அப்படி ஒன்றும் உம்மை நான் எப்படிச் சந்தோஷப் படுத்துவேன்.

காபாலி: தாங்கள் என்னை மன்னித்தால், அதுவே சந்தோஷம்.

பௌ. பிக்கு: நான் போய் வருகிறேன்.

காபாலி: வணக்கம் போய் வாரும். மீண்டும் சந்திப்போமாக.

பௌ. பிக்கு: அப்படியே.

காபாலி: தேவசோமா, கண்ணே! போகலாம் வா!
(போகிறார்கள்)

பரதவாக்கியம்

உலகத்தின் நன்மைக்காக ஓமத்தீ வளர்வதாக. பசுக்கள் பாலை நிறையச் சொரிவதாக. விப்பிரர் வேதம் ஓதுவாராக. ஞாயிறும் திங்களும் உள்ள வரையில் உலகம், தீயவை நீங்கி நன்மை பெற்று வாழ்வதாக. பகைவர்களை வென்ற வீரத் தோள்களையுடைய சத்துருமல்லன்[2] ஆட்சியின் கீழ் இன்பமும் அமைதியும் என்றும் தங்குவதாக.

1. சிவனும் அர்ச்சுனனும் போல

2. சத்துருமல்லன் என்பது மகேந்திரவர்மனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்று.

# ௧௦. தமிழிலக்கியம்

## திருநாவுக்கரசர் திருப்பாடல்கள்

மகேந்திரவர்மன் இயற்றிய மத்தவிலாசம் வடமொழியில் எழுதப்பட்டது. இவன் காலத்தில் இயற்றப்பட்ட தமிழிலக்கியம் இப்போது நாம் அறிந்தவரையில் திருநாவுக்கரசரின் தேவாரப் பாக்கள் ஒன்றுதான்.[1] அத் தேவாரப் பாக்களும் முழுவதும் நமக்குக் கிடைக்கவில்லை. திருநாவுக்கரசர் பாடியருளிய பதிகங்கள் 4900 என்று, சுந்தரமூர்த்தி சுவாமிகள் கூறுகிறார். என்னை?

> "இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல்
> ஈன்றவன் திருநாவுக் கரையன்."

என்று அவர் கூறியது காண்க. திருநாவுக்கரசர் திரு ஏகாதச மாலை,

> "பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
> பரசுநா வரசான பரமகா ரணவீசன்."

என்று கூறுகிறது. இவர் பாடியருளிய 4900 பதிகங்களுள் இப்போது உள்ளவை 312 பதிகங்கள்தான். மற்றவை செல்லரித்துவிட்டன. எனவே, நாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் ஏறக்குறைய வீசம் பங்குதான் (16-இல்

---

1. திருமழிசையாழ்வார் தமது பாசுரமொன்றில் குணப்பரன் என்னும் பெயரைக் கூறுகிறபடியினாலே, அவர் மகேந்திரவர்மன் காலத்தில் இருந்தவர் என்று சிலர் கருதுகிறார்கள்.

> "காப்பு மறந்தறியேன் கண்ணனே யென்றிருப்பன்
> ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும்—ஆக்கை
> கொடுத்தளித்த கோனே குணப்பரனே யுன்னை
> விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்."

என்பது திருமழிசையாழ்வார் பாடல். இதில், மகாவிஷ்ணுவைக் குணப்பரனே என்று விளிக்கிறார். குணப்பரன் என்பது, குணபரன் என்னும் சிறப்புப் பெயரையுடைய மகேந்திரவர்மனைக் கூறியதாகச் சிலர் தவறாக நினைத்துக் கொண்டு, திருமழிசையாழ்வார் மகேந்திரவர்மன் காலத்தவர் என்று கூறுவது ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று.

ஒரு பங்குதான்) இப்போது நமக்குக் கிடைத்துள்ளன! நாவுக்கரசர் தந்த இலக்கியச் செல்வத்தில் மிகப் பெரும் ப[illegible]யைத் தமிழ் நாடு இழந்துவிட்டது.

திருநாவுக்கரசரின் தேவாரப் பாக்கள் சொல் அழகும் பொருள் ஆழமும் உடைய இனிய செய்யுள்கள். இந்தச் செய்யுள்களில் இவருடைய கல்வியின் ஆழத்தையும் சொல்லின் ஆற்றலையும் நன்கறியலாம். இவர் தலைசிறந்த புலவர் என்பதை இவருடைய செய்யுள்கள் சான்று கூறுகின்றன. ஆழ்ந்த கருத்துள்ள இனிய கவிகளைப் பாடும் இவருடைய நாவன்மையைக் கண்டு, இவர் காலத்திலிருந்த அறிஞர்கள் இவருக்கு நாவுக்கரசர் என்று சிறப்புப் பெயர் வழங்கினார்கள்—இல்லை, சிவபெருமானே இப் பெயரை வழங்கினார் என்பர். திருநேரிசை, திருக்குறுந்தொகை, திரு நெடுந் தாண்டகம் முதலிய இவர் இயற்றிய செய்யுள்கள் இசைத் தமிழின்பாற்படுவன. சேக்கிழார் இவரை இன்தமிழ் ஈசர், தாண்டகவேந்தர், நாவின் மொழிக்கிறையாகிய அன்பர், இன்தமிழ்க்கு மன்னனான வாகீசத்திருமுனி, சிந்தை கரைந்துருகத் திருக்குறுந்தொகையும், தாண்டகமும், சந்த நிறை நேரிசையும் முதலான தமிழ் பாடிய பெரியார் என்று புகழ்கிறார். ஏன்? நாவுக்கரசரே, தாம் பாமாலை பாடியதைத் தம் பதிகங்களில் கூறுகிறார்.

> “பத்திமையாற் பணிந்தடியேன் றன்னைப் பண்ணாட்
> பாமாலை பாடப் பயில்வித்தானை.”

என்றும்,

> “பத்தனாய்ப் ப[illegible]ப் பண்ணாட்
> பாமாலை பயில்வித் தானை.”

என்றும்,

> “நாயேன் முன்னைப் பந்தமறுத் தாளாக்கிப் பண்கொண் டங்கே
> பன்னிய நூற்றமிழ் மாலை பாடுவித்தென்
> சிந்தை மயக்கறுத்த திருவருளினான்.”

என்றும் கூறுகிறார்.

திருநாவுக்கரசர் வேறு ஏதேனும் ஒரு காவியத்தை ...ற்றியிருந்தால், அந்தக் காவியம் தமிழ்மொழியில் தலை சிறந்த காவியமாக விளங்கியிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பக்தி வழியிலும், சமயத் துறையிலும் சென்ற இவர் பக்திப் பாடல்களைமட்டும் இயற்றியருளினார். இப் பாடல்களின் கம்பீரமும், சொல் நயமும், பொருள் அழகும் திருநாவுக்கரசர் பெருநாவலர் பெருநாவலர் என்று [illegible]

இவர் பாடிய பாடல்களில் சிலவற்றை இங்குக் காட்டுவாம்:

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே.

நன்று நாடொறும் நம்வினை போயறும்,
என்று மின்பம் தழைக்க இருக்கலாம்;
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே.

பஞ்ச பூதவலையிற் படுதற்கு
அஞ்சி நானும்ஆ மாத்தூர் அழகனை
நெஞ்சி னுள்நினைத் தேன்;நினை வெய்தலும்,
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே.

வேத மோதிலென்? சாத்திரங் கேட்கிலென்?
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்?
ஓதி யங்கம் ஓராறும் உணரிலென்?
ஈசனை யுள்கு வார்க்கன்றி யில்லையே.

நன்று நோக்கிலென்? பட்டினி யாகிலென்?
குன்றம் ஏறி இருந்தவஞ் செய்யிலென்?
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்?
என்றும் ஈசன்என் பார்க்கன்றி யில்லையே.

சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ணவுரிவை உடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண் முரணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவதியா தொன்று மில்லை அஞ்ச வருவதும் இல்லை.

மாதர் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவாரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்.

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே.
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்,
முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ?

பூங்கழல் தொழுதும் பரவியும் புண்ணியர் புனிதா உன்பொற்கழல்
ஈங்கிருக்கப் பெற்றேன்; என்ன குறையுடையேன்?
ஓங்கு தெங்கு இலையார் கமுகு இளவாழை மாவொடு மாதுளம் பல
தீங்கனி சிதறும் திருவாரூ ரம்மானே.

பழியுடை யாக்கை தன்னில் பாழுக்கே நீர் இறைத்து
வழியிடை வாழமாட்டேன் மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரால் அழிக்கப்பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர் வீரட்டனாரே.

தழைத்ததோர் ஆத்தியின்கீழ்த் தாபரம் மணலாற்கூப்பி
அழைத்தங்கே ஆவின்பாலைக் கறந்துகொண் டாட்டக்கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுத மீந்தார் குறுக்கைவீ ரட்டனாரே.

அருகெலாங் குவளை செந்நெ லகலிலை யாம்பல் நெய்தல்
தெருவெலாம் தெங்கும் மாவும் பழம்விழும் படப்பையெல்லாம்
குருகினங் கூடி யாங்கே கும்மலித் திறகு லர்த்தி
மருவலாம் இடங்கள் காட்டும் வலம்புரத் தடிக ளாரே.

மையறு மனத்தனாய பகீரதன் வரங்கள்வேண்ட
ஐயமில் அமரரேத்த ஆயிர முகமதாகி
வையகம் நெளியப் பாய்வான் வந்திழி கங்கைஎன்னும்
தையலைச் சடையில் ஏற்றார் சாய்க்காடு மேவினாரே.

கரும்பினும் இனியான் றன்னைக் காய்கதிர்ச் சோதியானை
இருங்கடல் அமுதந்தன்னை இறப்பொடு பிறப்பிலானைப்
பெரும்பொருட் கிளவியானைப் பெருந்தவ முனிவர்ஏத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே.

மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும் வித்தைவித்திப்
பொய்ம்மையாங் களையைவாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையுமன்றே.

குனித்தபுருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்தசடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

சிந்திப்பரியன, சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப்பொழிவன முத்திகொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்துநின்ற பழவினைதீர்ப்பன பாம்புசுற்றி
அந்திப்பிறையணிந்து ஆடும்ஐயாறன் அடித்தலமே.

இருடருதுன்பப் படலம் மறைப்ப மெய்ஞ்ஞான மென்னும்
பொருடரு கண்ணிழந்துண் பொருள்நாடிப் புகலிழந்த
குருடரும் தம்மைப்பரவக் கொடுநரகக் குழிநின்று
அருடரு கைகொடுத்தேற்றும் ஐயாறன் அடித்தலமே.

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந்தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின்மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற்செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்
காளத்தி யானவன் என்கண்ணுளானே.

குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான்தன்னைக்
குலவரையன் மடப்பாவை யிடப்பாலானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக்கொண்ட
மறையவனைப் பிறைதவழ் செஞ்சடையினானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்மமென்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தார்க்கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற்றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்தவாறே.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம்கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர்கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றேநீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னைமறந்தாள் தன்நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே.

உன்னுருவில் சுவைஒளி ஊறுஓசை நாற்றத்து
உறுப்பினது குறிப்பாகும் ஐவீர், நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
வையகமே போதாதே, யானேவாஞோர்
பொன்னுருவைத் தென்னூரூர் மன்னுகுன்றைப்
புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப் புகுந்தென்சிந்தை
தன்னுருவைத் தந்தவனை எந்தைதன்னைத்
தலைப்படுவேன் றுலைப்படுப்பான் தருக்கேன்மின்னே.

இருளாய உள்ளத்தின் இருளைநீக்கி
இடர்ப்பாவங் கெடுத்(து) ஏழையேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித்தன்போல்
யறியச்

மா

ஆறங்க நால்வேதத் தப்பால்நின்ற
பொருளானைப் புள்ளிருக்கும் வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோ(டு) இசைந்திலேன் நடுவேநின்ற
விலங்கலேன் விலங்கலாதொழிந்தே னல்லேன்
வெறுப்பனவே மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈயமாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே.

சங்கநிதி பதுமநிதி இரண்டுந்தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம்அல்லோம்
மதேவர்க்(கு) ஏகாந்தர் அல்லராகில்
அங்கமெலாம் குறைந்துஅழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பர்ஆகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவுளாரே.

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே.

எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணின்அல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகணில்லேன்
கழலடியே கைதொழுது காணின்அல்லால்
ஒண்ணுளே ஒன்பதுவாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போது உணரமாட்டேன்
புண்ணியனே உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

# ௧௧. திருநாவுக்கரசர் தேவார ஆராய்ச்சி

## 1. பழமொழிகளும் உவமைகளும்

திருநாவுக்கரசர் தம் பதிகங்களில் ஆங்காங்கே பழமொழிகளையும் உவமைகளையும் எடுத்தாண்டுள்ளார். ில் சிலவற்றைக் காட்டுவோம்.

கனியிருக்கக் காய் கவர்தல். முயல்விட்டுக் காக்கைப் பின் போனதுபோல். அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்டதுபோல. பனிநீரால் பாவை செய்வதுபோல. ஏதன்போர்க்கு ஆதன் போல. இருட்டறையில் மலட்டுப் பசுவைக் கறப்பதுபோல. விளக்கிருக்க மின்மினியில் தீக் காய்ந்தது போல. பாழூரில் பயிக்கம் புக்கது போல. (பயிக்கம் = பிச்சை.) தவம் இருக்க அவம் செய்தல். கரும்பு இருக்க இரும்பைக் கடித்தல்போல. இப் பழமொழிகள் திருவாரூர்ப் பழமொழிப் பதிகத்தில் வந்துள. மேலும், இவர் எடுத்தாண்ட பழமொழிகள் வருமாறு:—

"நரிவரால் கவ்வச் சென்று நற்றசை இழந்த தோற்றம்.'
(திருவதிகை நேரிசை, ௫)

"தலக்கமே செய்து வாழந்து தக்கவா றொன்று
விலக்குவா ரிலாமையாலே விளக்கதிற் கோழி போன்றேன்."

"பழியுடை யாக்கைதன்னில் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழமாட்டேன் மாயமுந் தெளியகில்லேன்."

"பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீரிறைத்தேன்
உற்றலால் கயவர் தேறர் என்னுங் கட்டுரையோ டொத்தேன்."
(திருக்கடவூர் நேரிசை, ௫, ௬, ௮)

"பாம்பின்வாய்த் தேரைபோலப் பலபல நினைக்கின்றேனை
ஓம்பிநீ யுய்யக்கொள்ளாய் ஒற்றியூர் உடைய கோவே."
(ஒற்றியூர் நேரிசை)

"பயிர்தனைச் சுழியவிட்டுப் பாழ்க்குநீர் இறைத்து."

"மத்துறு தயிரேபோல மறுகுமென்னுள் ளந்தானும்."
(திருஆரூர் நேரிசை, எ, க)

"வஞ்சனை பாற்சோறு." (திருநணிபள்ளி நேரிசை, ரு)

"என்கினேன் எந்தை பெம்மான், இருதலையினும் வேகின்ற
கொள்ளிமேல் எறும்பென்னுள்ளம், எங்ஙனம் கூடுமாறே."
(திரு நேரிசை, கூ)

"நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்க்கு."
(திருமயிலாடுதுறை. குறுந்தொகை, அ)

"மையலாய் மறவா மனத்தார்க் கெலாம்
கையில் ஆமலகக்கனி யொக்குமே."
(திருநீலக்குடி. குறுந்தொகை, உ)

"பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச்
சொற்பல்காலம் நின்றேத்துமின் தொல்வினை
வெற்பிற் றோன்றிய வெங்கதிர் கண்டவப்
புற்பனிக் கெடு மாறது போலுமே."
(சித்தத்தொகை. குறுந்தொகை, உரு)

"பிற்பகல் உணங்கல் அட்டும் பேதைமார் போன்றேன்."
(திருவதிகை. நேரிசை)

"ஆற்றிற் கெடுத்துக் குளத்தினில் தேடிய ஆதரைப்போல்."
(திருநல்லூர் திருவிருத்தம், கூ)

இனி, திருநாவுக்கரசர் கூறும் உவமைகள் சிலவற்றைக் காண்பாம்.

"அழிவுடைத்தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர் வீரட்டனாரே."
(திருக்கடவூர் நேரிசை, கூ)

உயிர்நிலை யுடம்பேகாலாய் உள்ளமே தாழியாகத்
துயரமே ஏற்றமாகத் துன்பக்கோலதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழியவிட்டுப் பாழ்க்கு நீரிறைத்து மிக்க
அயர்வினால் ஐவர்க் காற்றேன் ஆரூர் மூலட்டனாரே.
(திருவாரூர் நேரிசை, அ)

"சித்தத்துள் ஐவர்தீய செய்வினை பலவுஞ் செய்ய
மத்துறு தயிரேபோல மறுகுமென் உள்ளந்தானும்."
(திருவாரூர் நேரிசை, க)

வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்து வைத்து உலையையேற்றித் தழலெரிமடுத்த நீரில்
திளைத்து நின்றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்
இளைத்து நின்றாடுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே.
(குறைந்த திருநேரிசை)

"ஓடுநீரினை ஓட்டைக் குடத்து அட்டி
மூடிவைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே."
(பாவநாசக் குறுந்தொகை, க)

"கூவல் ஆமை குரைகடல் ஆமையைக்
கூவலோடு ஒக்குமோ குரைகடல் என்றல்போல்."
(ஆதிபுராணக் குறுந்தொகை, ௫)

"பொத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போல் மறுகும் என்சிந்தை. மறுகொழிவி."
(திருச்சத்திமுற்றம் திருவிருத்தம், ௩)

திருநாவுக்கரசர் திருக்குறள் கருத்துக்களையும், திருக்குறள் சொற்றொடர்களையும் சில இடங்களில் எடுத்தாள் அவை :—

"சொற்றுணைமாலை கொண்டு தொழுதெழுவார்கட் கெல்லாம்
நற்றுணை யாவர் போலும் நாகவீச்சரனாரே."
(திருநாகேச்சரம் நேரிசை, ௩)

"வாதை தீர்க்கவென் றேத்திப் பராய்த்துறைச்
சோதியானைத் தொழுதெழுந் துய்ம்மினே."
(திருப்பராய்த்துறை: குறுந்தொகை, ௫)

"தன்னை நோக்கித் தொழுதெழுவார்க் கெலாம்
பின்னை யென்னார் பெருமா னடிகளே."
(திருக்கடவூர் மயானம்: குறுந்தொகை, உ)

"தொடர்ந்து நின்று தொழுதெழுவார் வினை
மடங்க நின்றிடும் வான்மியூ ரீசனே."
(திருவான்மியூர்: குறுந்தொகை, ௫)

இப் பதிகங்களில் இவர் எடுத்தாள்கிற "தொழுதெழு வார்" என்னும் சொற்றொடர், திருக்குறளில்

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."

என்னும் திருக்குறளின் சொற்றொடரை நினைவுறுத்து கிறது.

"பற்றற்றார் பற்றவனாய் நின்றான் கண்டாய்."

"சுற்றினார் மதில்சூழ் மணஞ் சேரியார்
பற்றினாரவர் பற்றவன் காண்மினே."
(திருமணஞ்சேரி குறுந்தொகை, ௩)

"பனையுரியைத் தன்னுடலிற் போர்த்த வெந்தை
யவன்பற்றே பற்றாகக் காணினல்லால்."
(திருநாகைக்காரோணம் திருத்தாண்டகம், ௧0)

இவை,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

என்னும் திருக்குறளின் கருத்தையும் சொற்றொடரையும் அடியொற்றியுள்ளன.

ம்
பீடிலார் தனைசெய் வார்."
(திருப்பந்தணைநல்லூர் திருத்தாண்டகம், உ)

இதில் உள்ள உறுபிணியும் செறுபகையும் என்னும் சொற்றொடர்கள்,

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு."

என்னும் திரு

"வேண்டாமை வேண்டுவது மில்லான் றன்னை."
ண்டகம், ௧)

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில."

என்னும் திருக்குறள் கருத்தையும் சொற்றொடரையும் கொண்டுள்ளது.

"இடர்க்கடலுள் சுழிக்கப்பட்டிங் கிளைக்கின்றேற்கு
அக்கரைக்கே ஏறவாங்கும் தோணியை."
(திருவாவடுதுறை திருத்தாண்டகம், ச)

இக்கருத்து,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."

என்னும் திருக்குறள் கருத்தைக் கொண்டிருக்கிறது.

"ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்."
(திருமறைக்காடு திருத்தாண்டகம், ரு)

"ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு."

என்னும் திருக்குறளைப் பின்பற்றியுள்ளது காண்க.

"இன்றுளார் நாளையில்லை யெனும் பொருள்
ஒன்று மோராது உழிதரு மூமர்காள்!"
(திருக்காட்டுப்பள்ளி, க)

என்னும் இப்பாடல்,

"நெருநல் உளனொருவன் இன் என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

என்னும் திருக்குறளை நினைவுறுத்துகிறது,

## 2. சில மீன்களின் பெயர்கள்

திருநாவுக்கரசர் தம் பாடல்களில் சில மீன்களின் பெயர்களைக் கூறுகிறார். அவையாவன :

'முடங்கு இறல் முதுநீர் மலங்கு செங்கயல்
சேல் வரால் கெளிறு,
அடைந்த தண் கழனி அணியாரூர்..........."

"மாட்டில் நீர் வாளைபாயும் மல்கு சிற்றம்பலம்."

"வண்டு கொப்புளித்த தீந்தேன் வரிக் கயல் பருகி மாந்தக்
கெண்டை கொப்புளித்த தெண்ணீர்க் கெடிலம்.'

"வரிவரால் உகளுந் தெண்ணீர்க் கழனிசூழ் பழனவேலி
யரிவரால் வயல்கள் சூழ்ந்த யதிகை வீரட்டம்."

"மடுக்களில் வாளைபாயும் திரு வையாறு,"

"செய் வரால் உகளுஞ் செம்மைத் திருச்சோற்றுத் துறை."

"மடுக்களில் வாளை பாய வண்டினமிரிந்த பொய்கைப்
பிடிக்களிறென்னத் தம்மிற் பிணைபயின் றணை வரால்கள்."

"செங்கயல் சேல்கள் பாய்ந்து தேம்பழ மினிய நாடித்
தங்கயந் துரந்துபோந்து தடம்பொய்கை யடைந்து."

"சேலுடைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச்சரம்."

"செய்த்தலை வாளைகள் பாய்ந்துகளுந் திருவேதிகுடி."

... இறால், மலங்கு, வாளை, கயல், சேல், வரால், கெளிறு, கெண்டை என்னும் மீன்களின் பெயர்கள் தெரி...

கீழ்க்கண்ட செய்யுளடியில் நெல் வகைகளில் சில பெயரைக் கூறுகிறார் :—

"பெரிய செந்நெல் பிரம்புரி சேந்தசாலி திப்பியமென்றி
வையகத்
யாரூர்..........."

## 3. கட்டங்கம்

சிவபெருமான் தமது கையில் கட்டங்கம்[1] என்றும் கட்டுவாங்கம் என்றும் பெயருடைய ஆயுதத்தை வைத்திருக்கிறார் என்று திருநாவுக்கரசர் தம் தேவாரப் பாடல்களில் பல இடங்களில் கூறுகிறார். சில இடங்களில் கட்டங்கக் கொடி என்று கூறுகிறார். அப்பருக்குப் பிற்பட்ட காலங்களில் கட்டுவாங்கத்தைப்பற்றிய செய்தி நூல்களில் கூறப்படவில்லை. கட்டங்கம் ஏந்திய சிவபெருமானுடைய திருவுருவங்கள் காணப்படவில்லை. கட்டங்கம் அல்லது கட்டுவாங்கம் என்றால் என்ன? சிறுகோலின் ஒரு நுனியில் மண்டையோட்டைக் கட்டியிருக்கும் ஆயுதத்திற்குக் கட்டங்கம் என்பது பெயர். இதன் உருவ அமைப்பைப் பல்லவர் காலத்துச் சிற்பங்களில் காணலாம்.

நாவுக்கரசர் தமது தேவாரத்தில் கட்டுவாங்கத்தைக் குறிப்பிடுகிற பகுதிகள் இவை:—

"கட்டங்கம் தோள்மேல் வைத்தார்." "கைகொள் சூலத்தர் கட்டுவாங்கத்தினர்" "கட்டுவாங்கம் கபாலங் கைக்" "காதார் குழையினர் கட்டங்கத்தர் மாமலையார்." "கல்லலகு நெடும்புருவக் கபால மேந்திக் கட்டங்கத்தோடுறைவார் காப்புக்களே." "கட்டங் கந்தாமொன்று கையிலேந்தி." "நேசர் அடைந்தார்க்கு அடையாதார்க்கு நிட்டுருவர், கட்டங்கர், நினைவார்க்கென்றும் ஈசர்." "கட்டங்கம் ஒன்றுதன் கையிலேந்தி." "காபாலங் கட்டங்கக் கொடியர் போலும்." "கட்டங்கக் கொடி துடி கைக்கொண்டார் போலும்." "கங்காளர் வேடத்தானைக் கட்டங்கக் கொடியானை." "காபாலி, கட்டங்கம் ஏந்தினானை." "கட்டங்கக் கொடி திண்டோளாடக் கண்டேன்."

இவருக்கு இளையரும் இவர் காலத்தில் இருந்தவருமான திருஞானசம்பந்தரும் கட்டங்கத்தைக் கூறுகிறார். "கறையார் மணிமிடற்றான் காபாலி கட்டங்கன்," என்று அவர் கூறியது காண்க.

# 4. ஆரியமும் தமிழும்

ஆரியக்கலையும் தமிழ்க்கலையும் நன்கு கலந்தது "இந்து" சமயம். "இந்து" சமயம் என்பது சைவ வைணவ சமயமாகும். வைதிகப் பிராமணராகிய ஆரியர் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே தமிழ்நாட்டில் வந்திருந்தனர். ஆனால், தமிழ்ப் பண்போடு (திராவிடப் பண்புடன்) கலக்காமல் நெடுங்காலம் தனித்து இருந்து தமது வைதிக ஒழுக்கத்தை நடாத்திவந்தனர். அவர்கள் தனித்து இருந்த வரையில் அவர்கள் தமிழ்நாட்டிலே சிறப்படைய முடியவில்லை. பௌத்தரும் சமணரும் வைதீக ஆரியரை அடக்கி வைத்தனர். ஆதியில் வைதீகப் பிராமணர் இலிங்க வழிபாட்டையும், சிவன் திருமால் வணக்கத்தையும் மேற்கொள்ளாமல் புறக்கணித்தார்கள். ஆகவே அவர்கள் அக்காலத்தில் சைவ வைணவர்களாலும் பௌத்தர் சமணர்களாலும் புறக்கணிக்கப்பட்டிருந்தனர். பிறகு வைதீகர், திராவிடரின் கடவுள் வழிபாட்டை ஏற்றுக்கொண்டு சைவ-வைணவ மதத்துடன் கலந்து கொண்டனர். அதாவது தமிழர் (திராவிடர்) நாகரிகமும், ஆரிய (வைதீக) நாகரிகமும் கலக்கப்பெற்றன. ஆரியக்கலையும் தமிழ்க்கலையும் உறவுகொண்டன. திராவிடக்கலையை மேற்கொண்ட பிறகுதான் வைதீகப் பிராமணரின் நிலை உயர்ந்தது.

திருநாவுக்கரசர் இந்தத் திராவிட—ஆரிய சமயக் கலப்பைத் தமது தேவாரத்தில் குறிப்பிடுகிறார். இவர் காலத்திலிருந்த இவருக்கு இளையரான திருஞானசம்பந்தரும் இந்தக் கலப்பைக் கூறுகிறார். ஆரியம்—தமிழ் என்னும் இரண்டு பண்புகளும் ஒன்று சேர்ந்ததுதான் சைவம் என்று திருநாவுக்கரசர் கூறும் வாக்குகள் இவை :

"ஆரியந் தமிழோடிசை யானவன்."

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்
அண்ணா மலையுறையும் அண்ணல் கண்டாய்."

"முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்."

"செந்தமிழோடு ஆரியனைச் சீரியனை."

"வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன் காண்."

இவ்வாறே ஞானசம்பந்தரும் கூறுகிருர் :—

"தம்மலரடி யென் றடியவர் பரவத்
தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிமேற்சேர
வம்மலர்க் கொன்றை யணிந்த வெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சி கொண்டாரே."

"செந்தமிழர் தெய்வ மறைநாவர்
செழுங்கலை தெரிந்த வவரோடு
அந்தமில் குணத்தவர்களர்ச்சனைகள்
செய்ய அமர்கின்றவனூர்."

"தென்சொல் விஞ்சமர் வடசொற்றிசைமொழி
எழில்நரம் பெடுத்துத்
துஞ்சுநெஞ்சிருள் நீங்கத் தொழுதெழு தொல்புகலூர்."

"செந்திறத்த தமிழோசை வடசொல்லாகித்
திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிருகி."
—திருமங். திருநெடு - ௮.

என்று இவ்வாறு ஆரியக்கலையும் தமிழ்க்கலையும் ஒன்றென்று கூறிய நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும், வேறு வழியாகவும் இந்தக் கலப்பினைத் தம் தேவாரங்களில் வற்புறுத்திக் கூறுகிருர்கள். அஃதாவது, இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் வடமொழி நான்மறையும் அறம் பொருள் இன்பம் வீட்டைக் கூறும் தென்மொழி நான்மறையும் ஒன்றே ; இவ்விரண்டையும் அருளியவர் சிவபெருமானே ; இரு மறைகளும் ஒரே பொருளைக் கூறுகின்றன என்பதைத் தம் தேவாரப் பாடல்களில் ஆங்காங்கே கூறிச் செல்கிருர்கள். முதலில் திருநாவுக்கரசர் கூறியதைக் காண்போம் :

"தூய காவிரியின் நன்னீர் கொண்டு இருக்கு ஓதி ஆட்டி," என்றும், "சாமத்து வேதமாகி நின்றதோர் சம்புதன்னை" என்றும், "சாமவேதத்தர் எந்தையும் எந்தை தந்தையும் ஆய ஈசர்" என்றும், வேதத் தோடா

றங்கம் சொன்னார் போலும் என்றும், "அருமறையோ டாறங்கம் ஆய்ந்து கொண்டு பாடினார் நால் வேதம்." என்றும், "வேதியன்காண் வேதவிதி காட்டினான் காண்" என்றும் வடமொழி வேதங்களைச் சிவபெருமான் அருளிச் செய்தார் என்று கூறிய திருநாவுக்கரசர், தென்மொழி வேதத்தையும் ஆலின்கீழிருந்து அருளிச்செய்தார் என்று

ஆலின் கீழ் அறம் அருளியது: சிவபெருமான் ஆலின் கீழிருந்து அறம் உரைத்த செய்தியைத் திருநாவுக்கரசர் இவ்வாறு கூறுகிறார் :—ஆலின் நிழற்கீழ் அறமோதிய குழகன். மடற்பெரிய ஆலின்கீழ் அறம் நால்வர்க் கன்றுரைத்தான். விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு

"ஆலின்கீழ் அறங்க ளெல்லாம் அன்றவர்க் கருளிச் செய்து
நூலின்கீ ழவர்கட் கெல்லாம் நுண்பொரு ளாகி நின்று."

"வருந்தின நெருன லின்றாய் வழங்கின நாளர். ஆற்கீழ்
இருந்தின பொருள்கள் நால்வர்க் கியம்பினர்........"

பணைத்தெழுந்த ஆல்நிழற் கீழிருந்து ஆரண மோதி. ஆலின்கீழறத்தா ரன்னியூராரே. ஆலின்கீழ் அறம் பகர்ந் தார்.

"ஆலத்தார் நீழலில் லறம் நால்வர்க்குக்
கோலத்தால் உரை செய்தவன்......"

"நற்றவஞ் செய்த நால்வர்க்கு நல்லறம்
உற்றவண் மொழியால் அருள்செய்த நற்."

கொற்றவன். அறங்காட்டி யந்தணர்க்கன் றாலநீழல் அறம் அருளிச்செய்த அரனார். சொல்லருளி யறநால்வர்க் கறியவைத்தார். ஆலின்கீழ் அறநால்வர்க் களித்தான் கண்டாய். ஆலநீழல் அறஞ்சொன்னாய் போற்றி அன்றா லின் கீழிருந்து அறஞ்சொன்னானை. ஆலதனில் அற நால்வர்க் கருள்செய்தானை. அன்றாலின்கீழ்த் திருந்து மறைப்பொருள் நால்வர்க்கு அருள்செய்தானை.

இவ்வாறு ஆரிய வேதத்தையும் திராவிட வேதத்தையும் சிவபெருமான் அருளிச்செய்தார் என்று தனித்தனியே கூறிய நாவுக்கரசர்,

"வேதநான்கும் கல்லாலின் நீழற்கீழ் அறங்கண்டானே."

"பொய்யுரையா மறைநால்வர் விண்ணோர்க் கென்றும்
வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ."

"ஆலதன் கீழிருந்து நால்வர்க்கு
அறம் பொருள் வீடின்பம்
ஆறங்கம் வேதம் தெறித்தானே."

என்றும் கூறுகிறார். இவ்வாறு ஆரிய திராவிடக்கலைக் கலப்பைக் கூறிய நாவுக்கரசர், "புதியனவுமாய் மிகவும் பழையான்தன்னை" என்று ஒரே சொல்லில் முடிவாகக் கூறிவிட்டார்.

இவருக்கு வயதில் இளையரான இவர் [illegible] ஞானசம்பந்தரும், ஆரியவேதத் திராவிடவேதக் கலப்பினைத் தமது தேவாரப் பாடல்களில் ஆங்காங்கே காட்டுகிறார். இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் சிவபெருமான் அருளிச்செய்தார் என்று ஆங்காங்குக் கூறிய ஞானசம்பந்தர், சிவபெருமான் ஆலநிழலிலிருந்து அறமுரைத்தார் என்றும் கூறுகிறார். அவற்றில் சில வருமாறு :—

"மாலடைந்த நால்வர் கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே."

"அழிந்த சிந்தை அந்தணாளர்க் கறம்பொரு ளின்பம்வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே."

"நண்ணியோர் வடத்தி னீழல் நால்வர் முனிவர்க்கன்று
எண்ணிலி மறைப் பொருள் விரித்தவர்........"

"ஓரானீழல் ஒண்கழல் இரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினே."

"கல்லா னிழல்மேவிக் காமுறுசீர் நால்வர்க்கன்று
எல்லா வறனுரையும் இன்னருளாற் சொல்லினான்."

"அங்கம் நான்மறை, நால்வர்க் கறம்பொருளின்பம் பயனளித்த திங்கள் சேர் சடையான்."

சிவபெருமான் ஆலமரத்தின் கீழிருந்து அறநெறியை அருளிச்செய்தார் என்று நாயன்மார்கள் கூறுவது போலவே, திருமழிசை ஆழ்வாரும் தாம் அருளிய நான்முகன் திருவந்தாதியில் (17) கூறுகிறார் :—

"ஆல நிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கு
மேலை யுகத்துரைத்தான் மெய்த் தவத்தோன்."

என்பது அவர் வாக்கு.

இவ்வாறு ஆரியத் திராவிடக் கலப்பினை நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் கூறுவதுபோலவே பிற்காலத்தவரான சேக்கிழாரும் தமது பெரியபுராணத்தில் கூறுகிறார். அவற்றில் சிலவற்றைக் காட்டுவோம் :—

"ஆதிஅரு மறைவழக்கம் அருகிஅரன் அடியார்பால்
பூதிசாதன விளக்கம் போற்றல் பெறாதொழியக் கண்டு."

என்றும்,

"மன்னிய சைவவாய்மை வைதிக வழக்கமாகும்
நன்னெறி திரிந்துமாறி நவைநெறி நடந்ததன்றே."

என்றும்,

"பரசமயத் தருக்கொழியச் சைவமுதல்
வைதிகமும் தழைத்தோங்க."

என்றும்,

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க."

என்றும் சேக்கிழார் வைதிக நெறியையும் சைவ நெறியையும் தனித்தனியாகவும் இணைத்தும் ஓதுவது காண்க.

இதனால் இந்துமதம் (சைவம் வைணவம்) என்பது, திராவிட சமயமும், வைதிக சமயமும், பக்தியியக்கமும் கலந்துண்டாகிய ஒரு மதம் என்பது தெளிவாகிறது.

## 5. அகப்புறச் சமயங்கள்

திருநாவுக்கரசர் காலத்திலே சைவ சமயத்தில் சில உட்பிரிவுகளும் இருந்தன. அந்த உட்பிரிவுகளை அகப்புறச் சமயம் என்று கூறுவர். அவை பாசுபதம் மாவிரதம் காபாலிகம் வைரவம் என்பன. பாசுபதமும் மாவிரதமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. காபாலிகமும் வைரவமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. திருநாவுக்கரசர் தமது திருவாரூர்ப் பதிகத்தில்,

> அருமணித் தடம்பூண்முலை யரம்பையயோ டருளிப்பாடி
> உரிமையிற் றொழுவார் உருத்திர பல்கணத்தார்
> விரிசடை விரதிகள் அந்தணர் சைவர்பாசுபதர் கபாலிகள்
> தெருவினிற் பொலியும் திருவாரூர் அம்மானே.

என்று இந்தச் சமயங்களைக் கூறுகிறார். திருஞான சம்பந்தரும் தமது திருச்சண்பைநகர் தேவாரத்தில்,

> "காதலால், சைவர் பாசுபதர்கள் வணங்கும்
> சண்பை நகராரே."

என்று பாசுபத மதத்தாரைக் கூறுகிறார். திருநாவுக்கரசரால் சைவனான மகேந்திரவர்மன், தான் எழுதிய மத்தவிலாசம் என்னும் நாடகத்தில், காஞ்சிபுரத்து ஏகாம்பரேசுவரர் கோயிலிலும் அதனை அடுத்திருந்த மயானத்திலும் கபாலிகரும் பாசுபதரும் இருந்தனர் என்று கூறுகிறான்.

மானக்கஞ்சாற நாயனார் புராணத்தில் மக யரைப் பற்றியும், சிறுத்தொண்ட நாயனார் ல் வைரவரைப் பற்றியும் சேக்கிழார் கூறுகிறார்.

மாவிரதியர் என்றும் மகாவிரதியர் என்றும் கூறப்படுகிறவரைப்பற்றி ஆராய்வோம். இந்தப் பிரிவினரோடு தொடர்புடையவர் பாசுபதர். இவர்கள் பசுபதியை ர்கள். இவ்விருவருக்குள் பெரிய வேறுபாடு ேல சமயங்களில் இருவரும் ஒருவராகவே றப்படுகின்றனர். இந்தப் பாசுபதராகிய மாவிரதிகள்,

சுடுகாட்டில் வசிப்பவர். சுடுகாட்டுச் சாம்பலை உடம்பில் பூசி, இறந்தவர் எலும்பையும் தலையோட்டையும் மாலையாகக் கழுத்திலும் தலையிலும் அணிந்து கொண்டு, தலை மயிரினால் செய்த பஞ்சவடி என்னும் பெயருடைய பூணூலை மார்பில் அணிந்து கொண்டிருப்பார்கள் என்று அப்பர்சுவாமிகள் தேவாரத்தினால் அறிகிறோம்.

"முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்களோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலைமாலை விரதிகள்
அத்தனாரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்."

(திருவாரூர் திருவாதிரைப் பதிகம். க.)

"சவந்தாங்கு மயானத்துச் சாம்ப லென்பு
தலையோடு மயிர்க் கயிறு தரித்தான் தன்னைப்
பவந்தாங்கு பாசுபத வேடத்தானைப்
பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாம்
கவர்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னை."

(திருவீழிமிழலை திருத்தாண்டகம்.)

"பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பினானை."

(திருக்கஞ்சனூர். ௫.)

இந்தப் பாசுபத மாவிரதக் கோலத்தைச் சிவபெருமானே பூண்டிருந்தார் என்றும், அது விலையில்லாத வேடம் என்றும் அப்பர் கூறுகிறார்.

"தலையினாற் றரித்த வென்புந் தலைமயிர் வடமும் பூண்ட
விலையிலா வேடர் வீழி மிழலையுள் விகிர்தனாரே."

(திருவீழிமிழலை. ச)

பெரிய புராணத்தில், மானக்கஞ்சாற நாயனார் வரலாற்றில், மாவிரதியர் வேடம் இவ்வாறே கூறப்படுகிறது. சிவபெருமான் மாவிரதி வேடங் கொண்டு நாயனாரிடம் வந்து அவருடைய மகளின் கூந்தலைத் தமது பஞ்சவடிப் பூணூலுக்காகக் கேட்டார் என்றும், நாயனாரும் அதற்கிசைந்து மகளின் கூந்தலை அரிந்து கொடுத்தார் என்றும் கூறுகிறது. தலையிலே எலும்பு [illegible]யும், காதுகளிலே

எலும்பினால் செய்த குண்டலங்களும், கழுத்திலே எலும்பைக் கோத்தமைத்த தாழ்வடமும், மார்பிலே மயிரினால் செய்யப்பட்ட பஞ்சவடிப் பூணூலும், தோளிலே பட்டிகையும் அணிந்து திருநீற்றுப் பொக்கணத்துடன் மாவிரத மூர்த்தி எழுந்தருளினார் என்று பெரியபுராணம் கூறுகிறது.

"முண்டநிறை நெற்றியின்மேல் முண்டித்த திருமுடியில்
கொண்டசிகை முச்சியின்கண் கோத்தணிந்த எலும்புமணி
பண்டொருவன் உடல் அங்கம் பரித்தநாள் அது கடைந்த
வெண்டரளம் எனக் காதின்மிசை அசையுங் குண்டலமும்."

"அவ்வேன்பின் ஒளிமணிகோத் தணிந்த திருத் தாழ்வடமும்
பைவன்பேர் அரவொழியத் தோளில் இடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலும் மனச்
செவ்வன்பர் பவமாற்றுந் திருநீற்றுப் பொக்கணமும்."

இவ்வாறு மாவிரத முனிவர் வரக்கண்டு, மானக்கஞ்சாறர் எதிர்சென்று வணங்கி, மணப்பெண் கோலங் கொண்டிருந்த தம் மகளை அழைத்து அவரை வணங்கச் செய்தார். அப்போது அப் பெண்மணியின் கரிய கூந்தலைக் கண்ட மாவிரதியார் அக் கூந்தலைத் தனக்குத் தரும்படி அடியாரைக் கேட்டார்.

"தஞ்சரணத் திடைப் பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்
மஞ்சுதழைத் தெனவளர்ந்த மலர்க்கூந்தல் புறம் நோக்கி
அஞ்சலி மெய்த் தொண்டரைப் பார்த் தணங்கிவள் தன்மயிர்
நமக்குப்
பஞ்சவடிக்காம் என்றார் பரவ அடித் தலங் கொடுப்பார்."

அப்போது அடியவர்,

"இருள் செய்த கருங் கூந்தல் அடியில் அரிந் தெதிர்நின்ற
மருள் செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடை நீட்டினார்."

திருநாவுக்கரசர் பாசுபதரைத் "தலையறுத்த பாசுபதர்," "தலையறுத்த மாவிரதியர்" என்று கூறுகிறார்.

"முறைமையால் ஐம்பொறியும் வழுவா வண்ணம்
படித்தான் தலையறுத்த பாசுபதன்காண், பராய்த்துறை
யான் காண்." (திருக்காளத்தி திருத்தாண்டகம். உ.)

"தாட்பரவு கமலமலர் தயங்கு வானைத்
தலையறுத்த மாவிரதந் தரித்தான் றன்னை."
(திருக்கீழ்வேளூர். ௪)

இனி, வைரவராகிய காபாலிகரைப்பற்றி ஆராய்வோம். காபாலிகருக்குக் காளமுகர் எனும் பெயருமுண்டு. இதை,

"விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமருகங்கை
தரித்ததோர் கோலகால பயிரவனாகி."

என்று திருச் சேறைப் பதிகத்தில் திருநாவுக்கரசர் கூறுகிறார். வைரவ வேடத்தைப் பெரியபுராணம் இவ்வாறு கூறுகிறது: "படர்ந்த தலைமயிரைக் கொந்தளமாகப் பரப்பி, காதுகளில் தோடு அணிந்து, அக்குமணியால் ஆன சன்னவீரம், ஆரம், தாழ்வடம் இவைகளை யணிந்து, கையிலே கபாலபாத்திரமும் சூலமும் ஏந்திக் காபாலிகர் திரிவார்கள். இவர்களுக்கு முக்கிய அங்கம் தலையோடு. தலையோட்டிலே பிச்சை ஏற்று அதிலே உண்பார்கள். மது பானத்தையும் தலையோட்டிலே ஊற்றிக் குடிப்பார்கள். இவர்கள் நர மாமிசமும் உண்பார்கள் என்று பெரிய புராணம் கூறுகிறது.

"பெரிய பயிரவக் கோலப் பெருமான் அருளிச் செய்வார்
'யாம், பரியுந் தொண்டீர்! மூவிருது கழித்தால் பசு வீழ்த்திட
வுண்பது."

என்றும்,

"பண்பு மிக்க சிறுத் தொண்டர் பரிவு கண்டு பயிரவரும்,
'நண்பு மிக்கீர், நாம் உண்ணப் படுக்கும் பசுவும் நர பசுவாம்."

என்றும் வைரவர் சிறுத்தொண்டரிடம் கூறியதாகப் பெரிய புராணம் கூறுவது காண்க.

பவபூதி என்பவர் எழுதிய மாலதீமாதவம் என்னும் வடமொழி நூலில், மாலதீ என்பவளைக் காபாலிகன் ஒருவன் சாமுண்டிக்குப் பலியிட முயன்றதைக் கூறுகிறது.

காபாலிகர் பயிரவமூர்த்தியை வழிபடுவர். காபாலிகரைப்பற்றி, மத்தவிலாசப் பிரகசனத்தில் மகேந்திரவர்மன் அழகாகக் கூறுவதை அந் நாடகத்தில் காணலாம்.

இந்த அகப்புறச் சமயங்கள் நான்கும் வட இந்தியாவில் தோன்றியன. லகுலீ என்பவர், சிவபெருமானின் அவதாரமாகத் தோன்றி பாசுபத மதத்தை உண்டாக்கினர் என்பர். ஆகவே இதற்கு லகுலீ பாசுபதம் என்றும் பெயர் வழங்குகிறது. லகுலீ என்றால் தண்டு அல்லது தடியையுடையவர் என்பது பொருள். இராசபுதன தேசத்தில் பரோடா சமத்தானத்துத் தபோய் தாலுகாவைச் சேர்ந்த கார்வான் என்னும் ஊரில் லகுலீ பிறந்தார். இந்தக் கார்வான் நகரத்தின் பழைய பெயர் காயாரோஹணம் என்பது. இந்தக் காயாரோஹணம் என்னும் பெயர் காரோகணம் என்றாகிப் பிறகு காரோணம் என்றாகி இப்போது கார்வான் என்று வழங்கப்படுகிறது. இங்குப் பிறந்த லகுலீசர் பாசுபத மதத்தை உண்டாக்கினர். இவருக்குக் கௌசிகர் (குசிகர்), கர்க்கர் (கார்க்கியர்), மித்ரர் (மித்ரகர்), கௌருஷ்யர் (ருஷ்டர்) என நான்குபேர் சீடர்கள் இருந்தார்கள்.

இவர்களுக்குப் பாசுபத சாத்திர பஞ்சார்த்த தர்சனம் என்னும் ஒரு நூல் இருந்தது. அது ஐந்து அத்தியாயங்களைக் கொண்டிருந்தபடியால் பஞ்சத்யாயீ என்றும் அதற்குப் பெயர் உண்டு. அன்றியும் பாசர்வஜ்ஞர் (பாவசர்வஜ்ஞர்) என்பவர் இயற்றிய கணகாரிகை என்னும் ஒரு நூலும் உண்டு. இதற்கு ஒரு டீகை (உரை)யும் உண்டு.[1] லகுலீசருக்கு இராஜபுதனத்தில் பல இடங்களில் கோயில்கள் உள்ளன.

லகுலீ பாசுபதம் வடநாட்டில் உண்டான சமயம் என்பதற்குச் சான்றாக, சிறுத்தொண்டரிடம் வந்த பைரவர் தம்மை வடநாட்டிலிருந்து வந்தவர் என்று கூறுவதி

---

1. இந்த நூல் 1920-இல் பரோடா சமஸ்தானத்து மத்திய புத்தகசாலையின் தலைவர் C. D. தலால் என்பவரால் அச்சிடப்பட்டுள்ளது.

நந்தும் அறியலாம். வைரவர் சிறுத்தொண்டரைப் பார்த்து, "நிகழும் தவத்தீர்; உமைக் காணும்படியால் வந்தோம், உத்தராபதியோம்" என்று கூறியதாகப் பெரிய புராணம் கூறுகிறது. இப்போதும் செங்காட்டங்குடி கணபதேச்சரத்தில் உத்தராபதியாராகிய வடக்குநாத ருக்குக் கோயில் உண்டு.

இரண்டாம் புலிகேசியின் மருகனான நாகவர்த்தனன் இகத் புரியின் அருகில் ஓர் ஊரைத் தானம் செய்து அதனால் கபாலீசுவரரை வழிபடவும் காபாலிகரை ஆதரிக் கவும் செய்தான் என்று சாசனத்தினால் தெரிகிறது. வட இந்தியாவுக்குச் சென்று புலிகேசியின் வாதாபி நகரத்தை வென்ற சிறுத்தொண்ட நாயனார் (பரஞ்சோதியார்) வட இந்தியாவிலிருந்த காபாலிகருடனும் பயிரவருடனும் தொடர்பு கொண்டிருக்கக்கூடும். அதனால்தான், பிற்காலத் தில் கணபதீச்சரத்துக்கு வந்து சிறுத்தொண்டரைக் கண்ட பயிரவர், தம்மை "உத்தராபதியோம்" (வடக்கி லிருந்து வந்தவர்) என்று அவரிடம் கூறினார் போலும்

வடநாட்டில் காயாரோகணத்தில் (காரோணத்தில்) தோன்றிய இந்த லகுலீ பாசுபத மதமும் அதன் பிரிவு களும் அப்பர் சம்பந்தர் காலத்துக்கு முன்பே தமிழ்நாட் டிலும் வந்து சிற்சில இடங்களில் நிலைபெற்றிருந்தன. நாகைக்காரோணம், குடந்தைக்காரோணம் என்னும் இரண்டு காரோணங்களை அப்பரும் சம்பந்தரும் தமது பதிகங்களில் பாடியுள்ளார்கள். திருவாரூரிலும் சீகாழி யிலும் இந்தக் காபாலிக பாசுபதர்கள் இருந்தனர் என்பதை அப்பர் சம்பந்தர் தேவாரத்தினால் அறிகிறோம். காஞ்சி புரத்தையும் காரோண க்ஷேத்திரம் என்று காஞ்சிப் புராணம் கூறுகிறது. அதற்கு ஏற்பவே அப்பர் சுவாமி களும் அவர் காலத்தில் இயற்றப்பட்ட மத்தவிலாசமும் காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலிலும் அதையடுத்த கச்சி மயானத்திலும் பாசுபதரும் காபாலிகரும் இருந்த செய்தி யைக் கூறுகிறார்கள்.

பிற்காலக் கல்வெட்டுச் சாசனங்களினாலும் பாசுபதர், காபாலிகர் முதலியோர் தமிழ்நாட்டில் சில இடங்களில் இருந்தார்கள் என்பதை அறிகிறோம்.

லகுலீ பாசுபதர் திருவொற்றியூரிலும் இருந்தார்கள். சென்னைக்கு அடுத்த திருவொற்றியூர்க் கோயிலில், வட்டப் பாறை நாச்சியார் சந்நிதிக்கு எதிரில் பாசுபத ஒரு கோயில் உண்டு. இக்கோயிலில் பாசுபதமூர; உருவம் மிக அழகாக அமைந்திருக்கிறது. அது, பெரிய ல,

"மடல்கொண்ட மலரிதழி நெடுஞ்சடையை வனப்பெய்தக்
கடல்மண்டி முகந்தெழுந்த காளமேகச் சுருள்போல்
தொடர்பங்கி சுருண்டிருண்டு அறிநெறித் தசைந்துசெற
படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமாகப் பரப்பி"

"அயனகபாலந தரித்த இடத்திருக்கையால்
வயங்கொளிமூ விலைச்சூல மணித்திருத்தோள் மிசைப்பொலியத்
தயங்குசுடர் வலத்திருக்கை தமருகத்தின் ஒலிதழைப்பப்
பயன்தவத்தால் பெறும்புவியும் பாததாமரை சூட"

"அருள்பொழியுந் திருமுகத்தில் அணிமுறுவல் நிலவெறிப்ப
மருள்பொழிமும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்ப."
ர், உசு, நச, நடு)

என்று கூறியபடி சுடர்விட்டெரிவது போன்ற தலைமயிரும், குண்டலங்கள் விளங்கும் காதுகளும், புன்முறுவல் பூத்த ்ம், நின்ற கோலமாகக் காட்சியளிக்கிறார் பயிரவ அவருடைய ஒரு கையில் தண்டாயுதமும் (லகுளியும்), ஒரு கையில் கபால பாத்திரமும் மற்றொரு கையில் சூலமும் தாங்கியுள்ளார். இன்னொரு கையை அபயக் கையாகத் தாங்கியுள்ளார். இந்த அழகான திரு வுருவத்தில் சிற்பியின் கலைத்திறன் காணப்படுகிறது.

திருவொற்றியூர்க் கோயிலிலே இன்னொரு லகுலீசர் (பயிரவர்) திருவுருவமும் காணப்படுகிறது. இந்த மூர்த் தியைக் கௌளீசர் என்று கூறுகிறார்கள். கௌளீசர்

என்பது லகுலீசர் என்பதன் திரிபு. இருந்த கோலமாகக் காணப்படும் இந்த உருவமும் சடைமுடியில் கபாலந் தரித்து வலது கையில் திரிசூலமும் இடது கையில் கபாலமும் ஏந்தி, மற்ற இரண்டு வலது இடது கைகளில் அபய வரத முத்திரை காட்டி புன்முறுவல் பூத்த முகத்துடன் அமர்ந்திருக்கிறது. இந்த உருவங்கள் இங்கு இருப்பதனாலே முற்காலத்தில் காபாலிகரும் பாசுபதரும் இங்கு இருந்தார்கள் என்பதை அறியலாம்.

பாசுபதம் மாவிரதம் காபாலிகம் வைரவம் என்னும் அகப்புறச் சமயங்கள் நான்கும் இப்போது மறைந்து விட்டன.

## 6. சிவனும் திருமாலும்

சிவபெருமானையும் திருமாலையும் தமிழர் தொன்று தொட்டு வணங்கிவந்தார்கள். இருவரையும் வெவ்வேறு கடவுளாகப் பிரிக்காமல் இருவரையும் ஒருவராக வழிபட்டனர். ஒரே கோயிலில், ஒரே இடத்தில் இந்த இரு தெய்வ வணக்கம் நடைபெற்றது. பத்தி யியக்கம் தோன்றிய பிற்காலத்திலும், அதாவது கி. பி. ஆறும் நூற்றாண்டுக்குப் பிறகும், நாயன்மார்களும் ஆழ்வார்களும் சிவபெருமானையும் திருமாலையும் தனித்தனித் தெய்வங்களாகப் பத்திசெய்து திருப்பதிகங்கள் பாடிய காலத்திலுங்கூட, இரு கடவுளரும் பெரும்பாலும் ஒரே கோயிலில் வழிபடப்பட்டனர் அக்காலத்தில் சிவபெருமானுக்கு அம்மன் சந்நிதி தனியே இருந்ததில்லை. அக்காலத்துக் கோயில்களில் சிவபெருமான் உருவமும் திருமால் உருவமும் அமைக்கப்பட்டிருந்தன. ஏனென்றால், சைவசமயம் என்றும் வைணவசமயம் என்றும் வெவ்வேறு சமயப் பிரிவுகளும் சமயப் பிளவுகளும் அக்காலத்தில் ஏற்படவில்லை. நாயன்மார்கள் சிவனின் சக்தியை (அம்மையை)த் தமது பாடல்களில் பாடியபோதிலும் அந்த அம்மைக்குத் தனியே கோயில்கள் ஏற்படவில்லை. சைவம் வைணவம் என்னும் பெயர்கள் இருந்தபோதிலும், அக்காலத்தில்

இரண்டு சமயமும் ஒரு சமயமாகவே, வேற்றுமை இன்றிக் கருதப்பட்டன. நாயன்மார்கள் ஆழ்வார்கள் காலத்துக்குப் பிறகு, சைவசித்தாந்தம் என்றும் வைணவ விசிஷ்டாத்வைதம் என்றும் தத்துவ சாத்திரங்கள் எழுதப்பட்ட பிறகு, சைவ சமயமும் வைணவ சமயமும் தனித்தனியே பிரிந்துவிட்டது மட்டுமன்றி, பிற்காலத்தில் இரண்டு சமயங்களும் ஒன்றோடொன்று போராடிக்கொண்டன.

சைவமும் வைணவமும் வெவ்வேறாகப் பிரிந்துவிட்ட பிறகுதான், ஏறக்குறைய கி. பி பத்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு, சிவன் கோயில்களிலே தனியாக அம்மன் சந்நிதி கட்டத் தொடங்கினார்கள். இந்த உண்மை கல்வெட்டுச் சாசன ஆராய்ச்சியினாலும் விளங்குகிறது. இதற்குச் சான்று காட்டி எழுதுவதற்கு இஃது இடமன்று. சைவமும் வைணவமும் தனித்தனியே வெவ்வேறு மதங்களாகப் பிரிந்துபோவதற்கு முன்பு (ஏறக்குறைய கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக்கு முன்பு) சிவன் வழிபாடும் திருமால் வழிபாடும் பெரும்பாலும் ஒரே கோயிலில் நிகழ்ந்துவந்தன.

திருநாவுக்கரசர் காலத்தில் சைவம் வைணவம் என்னும் வேறுபாடு அதிகமாகக் காணப்படவில்லை. சிவபெருமான் திருமாலின் ஒரு பகுதியாகவும் திருமால் சிவபெருமானின் ஒரு பகுதியாகவும—இருவரும் ஒருவராக, சக்தியும் சிவமுமாக, அரிஹர மூர்த்தியாக—, வழிபடப்பட்டனர். திருநாவுக்கரசர் தம் தேவாரப் பாடல்களில் இதனைப் பல இடங்களில் குறிப்பிடுகிறார் :—

"காவியங் கண்ணளாகிக் கடல்வண்ணனாகி நின்ற
தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூரனாரே."

"மாலொரு பாகமாக மகிழ்ந்த நெய்த் தானனாரே."

"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே."

"மண்ணினை யுண்ட மாயன் றன்னையோர் பாகங் கொண்டார்."

"நாரணனை யிடப்பாகத் தடைத்தார் போலும்."

"தீக்கூருந் திருமேனி யொருபால் மற்றை யொருபாலும்
அரியுருவம் திகழ்ந்த செல்வர்."

"திருமாலோர் பங்கத்தன் காண்."
"குடமாடி யிடமாகக் கொண்டான் கண்டாய்."
"மாலை யிடப்பாகத்தே மருவக் கொண்டார்."

இவர் காலத்தில் இருந்த திருஞானசம்பந்தரும் இவ்வாறே சிவபெருமான் திருமாலைப் பாகமாகவுடையவர் என்று கூறுகிறார். மற்றும் திருநாவுக்கரசர், திருமால் அணியும் துழாய் (துளசி) மாலையைச் சிவபெருமானும் அணிந்திருக்கிறார் என்று கூறுகிறார்:

"தூங்கான் துளங்கான் துழாய்கொன்றை
துன்னிய செஞ்சடைமேல்
வாங்கான் மதியமும் வாளரவுங் கங்கை
தான் புனைந்தான்."
(திருநெய்த்தானம் திருவிருத்தம், க.)

இதைப்போன்றே நம்மாழ்வாரும், சிவபெருமான் அணியும் திருநீற்றினைத் திருமாலும் அணிகிறார் என்று கூறுகிறார்.

"கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்
பெரிய கோலத் தடங் கண்ணன் விண்ணோர் பெருமான்
தன்னை."

என்று அவர் கூறியது காண்க.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் கூறியது போலவே, ஆழ்வார்களும், திருமால் சிவபெருமானின் ஒரு கூறாக நின்று அரிஹர மூர்த்தியாக விளங்குகிறார் என்று கூறுகிறார்கள். அவர்கள் கூறுவன வருமாறு:—

"பிறை தங்கு சடையானை வலத்தேவைத்துப்
பிரமனைத் தன் உந்தியிலே தோற்றுவித்து."
(திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி)

"தடம்புனல சடைமுடியன்
தனியொரு கூறமர்ந்துறையும்
உடம்புடையான் கவராத
உயிரினால் குறைவிலமே."
(திருவாய்மொழி, ௪. ௰. அ. ௩ ௧௦.)

"கொங்கத்தார் வளங் கொன்றை யலங்கல் மார்பன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின்மேலாய்!
பனிவரையி னுச்சியாய்! பவள வண்ணா!"
ரண்டகம். கூ.)

"பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவரங்கத்தால் திரிவரேலும் ஒருவன்
ஒருவனங்கத்து என்றும் உளன்."
(முதல் திருவந்தாதி கூக. பொய்கையாழ்வார்.)

"நாகத்தான் நால்வேதத்துள்ளான் நறவேற்றான்
பாகத்தான் பாற்கடலுளான்."
(உ-ஆம் திருவந்தாதி உக. பேயாழ்வார்.)

"தாழ்சடையும் நீள்முடியும் ஒள்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து."
(-உ ஆம் திருவந்தாதி சுஉ. பேயாழ்வார்.)

"ஆறு சடைக்கரந்தான் அண்டர்கோன்
கூறுடையன் என்பதுவும்
(நான்முகன் திருவந்தாதி ச.

இந்தச் சான்றுகளினால் நமக்கு ஓர் உண்மை விளங்கு நாயன்மார்கள் ஆழ்வார்கள் காலங்களில், திரு மாலும் சிவபெருமானும் ஒரே கடவுளாக, அரிஹர மூர்த்தமாக, வேற்றுமையின்றி வணங்கப்பட்டனர். இந்த ஒற்றுமை அவர்கள் காலத்திற்கு முன்பே நெடுங்காலமாக இருந்து வந்தது. பக்தியியக்கம் தோன்றி வளர்ந்த காலத் தில், நாயன்மார்கள் சிவபெருமானையும் ஆழ்வார்கள் திரு மாலையும் சிறப்பாக வழிபடலாயினர். பக்தியில் ஆழ்ந்து போன நிலையில் ஆழ்வார்கள் சிவபெருமானையும் நாயன் மார்கள் திருமாலையும் சற்றுத் தாழ்த்தித் தம் பாசுரங் களில் பாடிய போதிலும், சிவபெருமானையும் திருமாலையும்

ஒன்றுபடுத்தியும் கூறினர். அதாவது இருவரையும் ஒன்று சேர்த்தும், வேறு பிரித்தும் இரண்டு வகையாகக் கூறினார்கள்.

அக்கால நிலையும் இருவரும் ஒத்துப்போகவேண்டியதாயிருந்தது. எப்படியென்றால், சமணரும் பௌத்தரும் நாட்டில் சிறப்பும் ஆதிக்கமும்பெற்றுச் சைவ வைணவ மதத்தைக் குன்றச்செய்து விட்டனர். இந்த நிலையில், பௌத்த சமணருடன் போராட வேண்டிய நேரததில், இவர்கள் தங்களுக்குள் வேற்றுமையையும் பிளவையும் ஏற்படுத்திக் கொண்டால், இவர்களுடைய குறிக்கோள் நிறைவேறாது. ஆகவே, சைவ வைணவ வேற்றுமையை அவர்கள் உண்டாக்கவில்லை. ஆனால் பிரிவுபடுத்திக் கூறாமலும் விடவில்லை. நாயன்மார்கள் ஆழ்வார்கள் திருப்பாசுரங்களை முழுவதும் படித்தால் அப்பாசுரங்களில் சிவன் திருமால்களைப்பற்றி ஒற்றுமையும் வேற்றுமையும் விரவியிருப்பதைக் காண்கிறோம்.

பகது இயககததன மூலமாக ஆழ்வார்களும் நாயன்மார்களும் பௌத்த சமண சமயங்களை ஒருவாறு அடக்கிய பிறகு, பௌத்தமும் சமணமும் சற்று வலிவு குன்றிய பின்னர், ஏறக்குறைய கி. பி. 10-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு, சைவமும் வைணவமும் வெளிப்படையாக வேறு வேறு மதங்களாகப் [illegible]ட்டன. பிரிந்து, சைவ சித்தாந்தம் என்றும் விசிஷ்டாத்வைதம் என்றும் [illegible] தனி சமயநூல்களை ஏற்படுத்திக்கொண்டு, திரிபுண்டரம் ஊர்த்துவபுண்டரம் முதலிய வேறுபாடுகளையும் வளர்த்துக் கொண்டு, ஒன்றையொன்று தாக்கிச் சண்டை சச்சரவுகள் [illegible]க்கரசர் காலத்தில் சைவம் வைணவம் என்னும் சமயப்பிரிவு வெளிப்படையாக ஏற்படாமல் இரண்டு கடவுளரும் ஒருவராகவே கருதப்பட்டனர் என்பது அவருடைய [illegible]ப்பாடல்க[illegible] தெரிகிறது.